# கம்பன் மணி மலர்

ஸ்ரீமுக 1994








கம்பன் புகழ்பாடிக்
கன்னித் தமிழ் வளர்ப்போம்

174/5

# கம்பன் மணி மலர்
# 1994

261

---

ஸ்ரீமுக பங்குனி 12 உ முதல் 15 உ வரை

1994 மார்ச் 25உ முதல் 28உ வரை நிகழ்ந்த

**56 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு**

---

**கம்பன் கழகம்**

கம்பன் மணி மண்டபம், காரைக்குடி - 623 002.

# முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி. கவிச்சக்கரவர்த்தி. காப்பிய வானில் கதிரவனாய் நின்று ஒளிர்பவன். இவன் கல்லாத கலையும், வேதக்கடலும் உலகில் இல்லை எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் நம் தந்தை பிரான் கம்பன்.

முத்தரையரிடமிருந்து தஞ்சைப்பகுதியை மீட்டுச் சோழப்பேரரசை நிறுவிய விஜயாலயன் காலத்தில் மிளிர்ந்தவன் கம்பன். விஜயாலயன் மகன், கோதண்டராமன் எனப்பெயர் சூடிக் கொண்ட ஆதித்தன் (கி. பி. 871-907) காலத்தில், அவனால் பெரிதும் மதிக்கப் பெற்ற வனாய் விளங்கியவன் கவிச்சக்கரவர்த்தி.

கம்பனை, பெற்ற தந்தையினும் பேணிக் காத்து நின்றவர் சடையப்ப வள்ளல். இன்று கதிராமங்கலம் என விளங்கும் வெண்ணெய் நல்லூர்தான் சடையப்பர் வாழ்ந்த வளநகர். கம்பனின் பல்துறைப் புலமையும், எல்லையிலாக் கவிதா சன்னதமும் கற்றோரையெல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடைத் தார் வேந்தர்களும், ரசிகப் பெருமக்களும், கம்பனைப் பெரிதும் மதித்துப் போற்றுவாராயினர்.

கம்பனின் பேராற்றப் பெரும்புலமைக்கு என்றும் கட்டியங் கூறிக்கொண்டு விளங்குவது அவன் அருளிய இராமாவதாரம் என்னும் இராமகாதை! தமிழ் மொழியின் வளத்திற்கும், தமிழர் தலை நிமிர்வுக்கும், ஒப்பற்ற உதவியாய் நின்று நிலவுவது கம்பராமாயணம். தமிழ் மொழியின் தனிப் பெரும் காப்பியத்தை, எம்மப்பன் கம்பன், சடையன் பதியாம் வெண்ணெய் நல்லூரில் அரங்கேற்றினான். மன்னர்களும், மறையோர்களும் ரசிகப் பெருமக்களும், அறம் பேணும் பொதுமக்களுமாக நிறைந்திருந்த, கண்ணியம் நிறைந்த, அவைக்களத்திலே அரங்கேற்றம் நடைபெற்றது. பவித்திரமான அக்காப்பியம் அரங்கேறிய புனித விழா ஒரு பெரும் திருவிழாவாக, ''நாவலோ, நாவல்!'' என்று நடந்திருக்க வேண்டும்.

சகாப்தம் 807; கலியாண்டு 3986க்குச் சரியான விசுவாவசு-பங்குனி 4ஆந் தேதி (கி.பி: 889 பெப்ருவரி-22) புதன்கிழமை அத்த நட்சத்திரமே இராமாவதாரம் அரங்கேறிய பெருநாள். அன்றுதான் நம்முடையன் கம்பனை, ''கவிச்சக்கரவர்த்தி'' என்று அறிவுடை யுலகம் மனமாரப் பாராட்டி விருந்தளித்து மகிழ்ந்தது.

கம்பன் பிறந்த நாளை நாமறிய எவ்வகைச் சான்றுகளும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்த நாளை நாம் நன்கறிவோம். பங்குனி-அத்த நாளில் தானே ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்தான்! எனவே இராமாவதாரம் அரங்கேறியதும் ''கவிச்சக்கரவர்த்தி'' என்ற விருதுப் பெயரைக் கம்பன் ஏற்றருளியதுமான அந்தப் பங்குனி அத்த நாளையே கம்பன் திருநாளாக – ஜன்ம நட்சத்திரமாக - ஏற்று, விழா எடுத்து

வருகிறோம். மகம், பூரம், உத்தரம் ஆகிய முதல் மூன்று நாள்களில் காரைக்குடியில் உள்ள கம்பன் மணி மண்டபத்திலும் பங்குனி அத்த நாளில் நாட்டரசன்கோட்டையில் கவிச்சக்கரவர்த்தி சமாதி கொண்டு எழுந்தருளி அருள் சுரக்கும் கம்பன் பள்ளி படைத் திருக்கோயிலிலும், தூய இலக்கியப் பெருவிழாவாகக் கொண்டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா எவ்விதமான சாதி, சமய, மொழி, கட்சி, பால் வேறுபாடின்றி யாவரும் கலந்து மகிழும் அருமையுடையதாகும், புலவர்களும்; கலைஞர்களும், கவிஞர்களும், திறனாய் வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டுதோறும் வந்து கலந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும், பெருமை செய்கின்றனர்.

கம்பன் திருநாட் செலவு ஆண்டுக்காண்டு கூடிக்கொண்டே வருகிறது. ஐம்பத்து ஐந்து ஆண்டுகட்கு முன் முன்னூற்றைம்பது ரூபாய் அளவில் தொடங்கிய கம்பன் திருநாளின் செலவு ஆண்டு தோறும் வளர்ந்து எத்தனைச் சிக்கனமாக நடத்தினும், ரூபாய் முப்பதினாயிரத்துக்கும் மேல் உயர்ந்து விட்டது. நிலையறியும் உடனுறை நல்லன்பர்கள் முன் வந்து உவந்தளிக்கும் நன்கொடை, செயலின் ஒரு சிறு பகுதியையே ஈடு செய்கிறது.

இந்நிலையில் கம்பன் பற்றிய கட்டுரைகளைத் தொகுத்துப் பயனுள்ள மலர் வெளி யிடுவதென்றும், அதில் விளம்பரங்கள் வெளியிடுவதென்றும், முடிவு செய்யப்பெற்றது. அதற்குக் கம்பன் பால் அன்பும், திரு. கம்பன் அடிப்பொடியின் பால் பரிவும் உள்ள அன்பர் கள் பலர் விளம்பரங்கள் தந்துதவி, இப்புனிதப் பணிக்கு ஆக்கம் தர முன் வந்துள்ளனர்.

இவர்கட்கெல்லாம் எளியோம் என்ன கைம்மாறு இயற்ற வல்லோம்? எம்மப்பன் கம்பனும் அவன் பாடிப் பரவும் முழுமுதற் பரம்பொருளும், இவ் அறவோர்கட்கும் இவர் களின் முயற்சிகட்கும், தொழில்துறை வாணிபங்கட்கும் எல்லா நலன்களையும், வளங்களை யும் அருளிக் காத்தருள வேண்டுமென்று மனமொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகிறோம்,

எல்லா வகையாலும் முன்னரும், பின்னரும் கம்பன் திருநாளுக்கும், கம்பன் திருப்பணி கட்கும் உதவிய-உதவி வருகிற-அறிவுள்ளம் படைத்த பெரியோர்கள், அன்பர்கள் யாவர்க்கும் என்றும் மறவா நன்றியுடன் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி மகிழ்கிறோம்.

இம்மலரை மிக்க சிரத்தையுடன் அச்சிட்டு உதவிய சௌந்தரம் அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி உரியதாகும்.

கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி-623 002
25-3-94

அன்பும் பணிவுமுள்ள
கம்பன் கழகத்தார்



''முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்

பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்

அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
அவன் பெயராய்த் தன் பெயரை ஆக்கிக் கொண்டான்

தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே.''

- கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம்

"நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் இதுஅல்லால்
என்னை அடியோம் செயற்பால?"



"நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்;
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்"

*"Who can say more than this rich praise that you alone are you?"*

त्वमेव माता च पिता त्वमेव,
त्वमेव बन्धुश्च सखा त्वमेव,
त्वमेव विद्या द्रविणं त्वमेव,
त्वमेव सर्व मम देव देव ।।

கம்பன்

# மணிமண்டபக் கால்கோள் விழா

---

## சா. கணேசன் வணக்கவுரை

---

சௌமிய—பங்குனி—ஆறும் நாள் வியாழன்

19–3–1970

[23 ஆண்டுகட்கு முன்னர் கம்பன் அடிப்பொடி அவர்கள் நிகழ்த்திய இவ்வுரையையும், 18 ஆண்டுகட்கு முன் நிகழ்த்திய தமிழ்த்தாய் கோயில் கால்கோள் விழா வரவேற்புரையையும், மூதறிஞர் வ. சுப. மாணிக்கனார் எழுதிய திட்டங்களையும் இங்கே வெளியிடுவதில் ஒரு நோக்கமுண்டு. என்று நிறைவடையும் இவை எல்லாம்? என்று திறக்கும் இறையருட்கண் ?

—கம்பன் கழகத்தார்]

''உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா-
அலகிலா-, விளையாட்டு உடையார்அவர்
தலைவர் ; அன்னவர்க்கே சரண் நாங்களே!''

— கம்பன்

ஃ ஃ ஃ

அன்னையாய், அத்தன் ஆகி, அருளும்நல் ஆசான் ஆகி,
பின்னும்எனை ஆண்டு கொண்ட பெருந்தெய்வம் தானே ஆகி,
கன்னிஎனும் தமிழ்த்தாய் ஈன்ற கவிச்சக்ரவர்த்தி ஆன
என்னுடையன் கம்பன் பாதம் என்றும்எனது உச்சிமீதே!

ஃ ஃ ஃ

முன்னைமொழி யாவுக்கும் மூத்த தமிழ்க் கிழவி
கன்னிநிலை மாருக் கவின்குமரி—இன்னுந்தான்
''என்னைஇவள் காலம்?'' என யாரும் கணிக்கஒணு
அன்னவள்தாள் சென்னிக்கு அணி.

ஃ ஃ ஃ

மாண்புமிகு கல்விஅமைச்சர் நாவலர் அவர்களே!
மாண்புமிகு நிதியமைச்சர் மதி அவர்களே!
தமிழறிஞர்களே ! அறச் செல்வர்களே!
பெரியோர்களே ! தாய்மார்களே!

உங்கள் அனைவரையும் வணங்கி வரவேற்கிறேன். ஏழையேன் வாழ்நாளில் இந்நாள் ஒரு நன்னுள் ; போன்னுள் ; புனித நாள் ! காலமெல்லாம் உள்ள தமிழ் மொழிக்கு, ஓர் ஒப்பற்ற காப்பியத்தை அருளிச் செய்து, ''என்று முள தென் தமிழ்'' என்று ஏற்றம் காட்டித் தமிழ் மொழி தமிழ்க்கலை, தமிழ் நாகரிகம், தமிழ்ப் பண்பாடு ஆகியவற்றையெல்லாம் அற்புதமாகச் சித்திரித்து விளங்கும் என்னப்பன், என் ஆசான், என்தெய்வம், கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கு மணிமண்டபம் எடுப் பதற்குக் கால்கோள் விழா நிகழும் இந்நாள் எத்துணை விழுமிய தென்பதை ஏழை யேன் எங்ஙனம் எடுத்துரைக்க மாட்டுவென்?

இந்த மணி மண்டபம் நாப்பண் நனி விளங்க, இதன் தெற்கில் உலகத் தவிசில் ஓங்கியிருந்தருளும் கன்னித் தமிழ்த் தாயின் திருக்கோயில் திகழவும், வடக்கில் பன்னரும் பெரும் புகழ்ப் பழந்தமிழ்க் கலைகள் பயன் பிலிற்றும் கூடங்கள் மிளிரவும், நாற்புறமும் தமிழ் மணம் கமழவும் வேண்டும் என்பது பெருநோக்கம்,

தமிழ் அன்பர்களும், படிமக் கலைஞர்களும், வெளிநாட்டறிஞர்களும் மெய் யாகப் பாராட்டியது, நிகழ்காலத்தில் தோன்றிய தமிழ்த்தாயின் திருப்படிமம். இப்படிமத்தைக் கண்டு அறிஞர் அண்ணு அவர்கள் மனமுருகப் பாராட்டினர்கள்.

இதன் அச்சுப் படத்தைப் பெற்றுக் கொண்டபோது அதைக் கண்ணில் ஒற்றிக் கசிந்துள்ளம் நெகிழ்ந்தார்கள். தமிழ்த்தாயின் செப்புப் படிமத்தை வடித்து வெற்றி கண்ட அமரர்-சிற்பகலா சாகரம்-திரு. ம. வைத்தியநாத ஸ்தபதியார் இதன் அருமையை, அமைதியை, வடிவினை, உள்ளுறை பொருளை, எல்லாம் பலவாறு பாராட்டி மகிழ்ந்தார். அப்பொழுது அவர்,

''நடராஜ மூர்த்திக்குப் பிறகு இம்மூர்த்தியே பல்லாற்ருனும் கலை, தத்துவம், விஞ்ஞானம் ஆகிய மூன்றின் கருத்துச் செறிவு முள்ளது; எங்களைப் போன்ற ஸ்தபதிகட்கு இந்த இரண்டு மூர்த்திகளுந்தான் அற்புதப் பொருளாக உள்ளன''.

என்று கூறியது என் செவிகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

படிமக் கலைத்துறையில், இத் திருப்படிமம், ஒரு சிறந்த, புதிய அடைவு என்று படிமக்கலை வல்லுநர்கள் நெஞ்சார மொழிகின்ருர்கள். இத்தகு தனித்துவம் பெற்ற, ஒரு திருப்படிமத்தைப் பெறும் பேற்றை ஆண்டவன் அருளால் நாம் பெற்றமைக்காகப் பெருமையும், பெருமகிழ்வும், உள நிறைவும் கொள்ள வேண்டும். கொள்ளுகிரேம். உலகமிசை உவந்திருந்தருளும் ஒருதனிச் செம் மொழி யரசியாம் கன்னித் தமிழ்த்தாய் காரைக்குடியில் முதன் முதலாகக் கோயில் கொண்டருளிக் காலமெல்லாம் பயன் சுரக்க அன்னை அவளருளை வேண்டி நிற்போம்.

மணி மண்டபத்து வடபால் அமையும் தமிழ்க் கலைதெரி கழகக் கூடங்களில் மொழி, கலை, பணி மலரவேண்டும். வரலாறு, மொழியின், எழுத்தின்-எண்ணின்-இலக்கணத்தின் படிவளர்ச்சி, கட்டடத் துறை, ஓவிய-சிற்ப-படிமக்கலை, இவற்றுடன் இயைந்த கோணிலை, ஒளிநூல், ஆகமம், உருப்பா (தியான சுலோகம்) முதலியவற்றை முறைப்படி கற்பித்து வருங்காலத்தில் இத்துறை அறிவு வளம் பெறச் செய்யும் பயிற்சித்துறை மலர அன்னையவள் அருளை வேண்டுவோம்.

இந்த உணர்ச்சியை ஊட்டி, ஆர்வத்தை உண்டாக்கி, ஈடுபாட்டை கொளச் செய்தவன் கவிச்சக்ரவர்த்தி கம்பனே! ''இவன் இசைகள் கூரக் கல்லாத கலையும், வேதக் கடலும் உலகத்து எங்கும் இல்லாத!'' என்று சொல்லுமாப் போலே கல்வியிற் பெரியனுய்ப் பிறங்குகின்ருன் கம்பன். ''என்னையுமே தன்னடியனுய்க் கொண்டு, கன்னித் தமிழ்ப் பணிக்கு என்னைக் கை காட்டி விட்ட அன்னவன் அடித்துகளே அடியனேன் சென்னிக் கணி!'' என, நாளும் மகிழ்வேன்.

இந்தப் பவித்திரமான விழாவுக்குத் தலைமை தாங்கி இவ்விழாவினையும், பயன் சுரக்கவிருக்கும் திருப்பணியினையும், பொலிவும், வலிவுமுள்ளதாக்க மனம் கொண்டு ஈண்டுப்போந்துள்ள கல்வி பொதுநலத்துறை அமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்களின் அன்புக்குக் கைமாறும் உண்டோ?

அங்ஙனமே உள்ளம் நிறைந்த அன்புடன் மணிமண்டபத்துக்கு அடியிட இசைந்து ஈண்டுப் போதுள்ள நிதியமைச்சர் மாண்புமிகு மதியழகன் அவர்கட்கும் என்ன கைம்மாறு செய்யவல்லோம்?

கல்வியும் செல்வமும் ஒரு வழியானல் எல்லையில் பயனை எய்தலாம் அன்ரே? அவ்விரு துறை அமைச்சர் பெருமக்களும் ஒருங்கு வந்து பணியாற்ற இசைந்த-

சேர்ந்த-வாய்ப்பே அரும்பேருகு!ம் பண்புக்கும் பயனுக்கும் அடிப்படையான கல்வி-நிதியமைச்சர்கள் இவ்விழாவில் தலைமை ஏற்றும் அடிகோலியும் உதவ முன் வந்தது தமிழ்த்தாயின் நல்லூழே ; நமது பெரும் பேறே !

ஏழையேன் கடந்த சில ஆண்டுகளாகப் புரிந்து வரும் சிறிய பணியையும், தமிழ்ப்பற்றுள்ளமும் என்பால் கொண்ட அன்பும் காரணமாக என்னையும் ஒரு பொருட்டாய் மதித்து இப் பணி வாழவேண்டும்; வளர வேண்டும், வளர்ந்து பயன் சுரக்க வேண்டும் என்ற பெரும் பரிவினல், கருணையால்; அரும்பொருள் திரட்டி உதவ முன்வந்துள்ள அன்பர்கள் அறவோர்கள், கொடைஞர்கள், ஆகியவர்கட்கெல்லாம் இந்த இப்பிறவியில் மட்டுமின்றி இனி வரும் பிறவிகளிலும் நன்றிமறவா நலனுடையேனுக கம்பனருளை வேண்டிநிற்கின்றேன். இவர்கள் யாவருக்கும் ஆண்டவன் எல்லா நலன்களையும் அருள வேண்டுமென்று நெஞ்சார வேண்டி நிமலனைத் தொழுவதல்லால் எளியனேன் மற்றென் செயவல்லேன்?

இன்று நாவலர் தலைமையில் மதிவலர் அடியிட்ட இம் மணிமண்டபமும், இதனைச் சுற்றி மலர உள்ள மனைகளும் அன்பை அறத்தை, அறிவை, ஒழுக்கத்தை, நாகரிகத்தை, பண்பாட்டைவளர்க்கும் தமிழ் நாற்றங்காலாய்-விரைப்பண்ணையாய்-என்றும் நின்று விளங்க, ஆண்டவனும், அரசும், அன்பர்களும், அறவோர்களும், அறிஞர்களும், அனைத்து மக்களும் துணைபுரிய வேண்டும் என்று பல்காலும் சிரந்தாழ்த்தி, கரங்கூப்பி, நிலந்தோய்ந்து, வேண்டிக் கொள்ளுகிறேன்.

மீண்டும் இப்பணிக்கு உதவ முன வந்துள்ள யாவருக்கும் ஈண்டு எழுந்தருளியுள்ள யாவருக்கும் நன்றி ததும்பும் நெஞ்சார வணக்கம் செலுத்தி நல்வரவு கூறியமைகின்றேன்.

காரைக் குடிஒங்கும் கம்பன் அறநிலை'தான்
சீராய் வளர்ந்து செழித்திருக்க — நேராய்ப்
புரந்துஅளித்துக் காப்போர் புகழ்ச் சேவடிஎன்
சிரம்தன்மேல் வீற்றிருக்கும் சேர்ந்து.

ஃ ஃ ஃ

'கம்பன் அறநிலை'யைக் காத்துப் புரப்பவர்தாள்
நம்பித் தலைக்கணியும் நலம்கூர்வான்— செம்பதுமக்
கம்பன் அடிமலரில் காலம்எலாம் தேன்சுவைக்கும்
தும்பி கணேசன் தொடர்ந்து.

ஓம்

# தமிழ்த்தாய் கோயில் கால்கோள் விழா

தமிழக முதல்வர் மாண்புமிகு
டாக்டர் கலைஞர் அவர்களே!

தமிழக அமைச்சர்
மாண்புமிகு மாதவன் அவர்களே !

தமிழக அமைச்சர்
மாண்புமிகு சாதிக்பாஷா அவர்களே

தமிழக அமைச்சர்
மாண்புமிகு ஒ. பி. ராமன் அவர்களே!

மேலவைத் துணைத் தலைவர்
ம.பொ.சி. அவர்களே!

துணைவேந்தர் சிட்டிபாபு அவர்களே!

குன்றக்குடி அடிகளார் அவர்களே!

காசிவாசி அடிகளார் அவர்களே!

நகரவைத் தலைவர் சிதம்பரம் அவர்களே!

கம்பன் அறநிலை காப்பாளர்களே!

கம்பன் கழகத்தினர்களே!

பெரியோர்களே! தாய்மார்களே!

உடன் பணியாற்றும் தோழர்களே!

உலகிலேயே முதன்முதலாகத் தோன்றும் தமிழ்த்தாய் கோயில் கால்கோள் விழாவுக்கு அன்புடனும் ஆர்வத்துடனும் வந்துள்ள உங்கள் யாவருக்கும் மனமார்ந்த வணக்கம் கூறிக் கம்பன் அறநிலையின் சார்பாக தமிழ்த்தாய் அடியார்கள் சார்பாக வாய்மணக்க, ‘‘வருக! வருக! ’’ என்று நல்வரவு கூறி வரவேற்று மகிழ்கிறேன்.

கம்பன் கழகம் 1939ல் தோன்றியது முப்பத்தேழு ஆண்டுகளாயின. 1940ல் கம்பன் திருவுருவப் படம் எழுதப் பெற்றது. அதை அடுத்துக், கம்பன் கழகம், தமிழ்த் தாய் திருவுருவப் படத்தை 1941ல் எழுதச் செய்தது. எண்ணற்ற தமிழ் அறிஞர்களும், சிற்பத்துறை வல்லுநர்களும், பெரிதும் பராட்டினர் அப்படத்தை.

தமிழ்த்தாய்படம் 1946ல் முழு ஓவிய மாகச் சமைக்கப் பெற்றது. அதன்பின் 1957ல் ஐம்பொன்னால் வடிக்கப் பெற்றது கம்பன் கழகத்து இலச்சினையில் தமிழ்த்தாய் திருவுருவம் கடந்த முப்பத்தைந்தாண்டு களாக மிளிர்வதை அன்பர்கள் யாவரும் நன்கறிவர்.

உலகில் ஒருமொழி, ஒரு தனி மொழி, தன்னேர் இல்லாத தமிழ் என்பதை உணர்த்தத் தமிழ்த்தாய் உலகத்தின் மீது அமர்ந்துள்ளாள். நாடகம், இசை, இயல் மூன்றையும் உணர்த்தும் முறையில் வலது தன்கரத்தில் கபித்த முத்திரையும், இடது மேற்கையில் செங்கோட்டியாழும், இடது தன்கரத்தில் ஏட்டுச்சுவடியும் விளங்கு கின்றன. அறிவை உணர்த்தும் தீவட்டில் வலது மேற்கையில் விளங்குகின்றது. மொழி இருவடிவங்களை உடையது. ஒன்று ஒலிவடிவம்; மற்றொன்று வரிவடிவம். ஒலிவடிவம் அநாதி; அதாவது காலம் கணிக்க முடியாதது. வரி வடிவம் காலம் கணிக்க முடிவது இவ்விரண்டு தன்மைகளையும் முறையே யாழும், ஏடும் உணர்த்திக் கொண்டிருக் கின்றன.

தமிழ்த்தாய் உலக உருண்டையின் மீது அருள் சுரக்கும் திருமுக மண்டலத்துடன் செம்மாந்து வீற்றிருக்கிருள். இடக்காலை உள் மடக்கி வலக்காலைத் தொங்கவிட்டுச் சுகாசனமிட்டு வீற்றிருக்கிருள். அவள் திருவடியைத் தூய்மையின் சின்னமான வெண்டாமரை மலர் தாங்கிக் கொண்டிருக்கிறது. அன்னவளின் புடைவைக் கட்டு தமிழகமான தென்னிந்திய நில அமைப்பைப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

தமிழ்த்தாய் அணிந்துள்ள பாதசாலகம் என்னும் பாடகம், சிலம்பு மெட்டி அல்லது கான்மோதிரம், மேகலை, மோதிரம், கைக்கட்டு அங்கதம் கேயூரம் மணிவடம், தாழ்வடம், சரப்பளி: அரும்புசரம், தோடு கன்னப்பூ, கரண்டமகுடம், பிரபை முதலிய அணிகள் பண்டை இலக்கிய-சிற்ப நூல்களில் விளக்கப்பெற்ற முறையில் அமைந்துள்ளன.

தமிழ்த்தாய் அமைக்கும்பொழுது ராய். சௌந்ரி சில்பஸ்ரீ ராமச்சந்திரன் PR.சர்மா, வயித்யநாதஸ்தபதியார் முதலியபல அறிஞர்கள் திருத்தங்கள் கூறி உதவியவர்கள். பின்னர் இதன் அமைப்பையும் பொருட் செறிவையும் கண்டபல உள்நாட்டு வெளிநாட்டு Iconographists படிமக்கலைவலர்கள் மனமாரப் பாராட்டியதுடன் தமிழகப் படிமக் கருவூலத்தில் இஃதொரு புதிய சேர்க்கை என கணித்து வரவேற்றனர் மாகலைவாணரான ஆனந்த-குமாரசாமி அவர்கள் இதை வியந்து பாராட்டியவர்களுள் ஒருவர்.

இந்த ஐம்பொன் திருவுருவியத்தைப் பெரிதும் முயன்று மூன்றும் முறையில் வடித்தெடுத்த பெருமகன் சிற்ப கலாசாகரம் ம. வைத்யநாதஸ்தபதியார் ஆவர். அவரை யான் என் அண்ணனுகவே எண்ணி மதித்து வந்தவன் அவரை இந்த நன்நேரத்தில் நெஞ்சார நினைந்து பல்லோர் முன்னிலையில் அவர்க்கு வணக்கம் செலுத்துகிறேன். மாமல்லபுரத்தில் வார்த்தெடுத்த என்னம்மையைக் காரைக்குடிக்குக் கொண்டு வந்து சேர்த்தவர் அவர் மருகரும் கன்னியாகுமரி விவேகானந்தர் நினைவாலயத்தைச் சிருஷ்டித்தவருமான ஸ்தபதி S.K. ஆச்சாரிஆவார்

இந்த நல்வேளையில் இன்னென்றையும் கூறவேண்டுவது என் கடமையாகும் சுமார் ஓராண்டுக் காலத்தில், இருமுறை கருக்கொள்ளாது பிணங்கிய தமிழ்த்தாயைக் கருக்கொள்ளவும், உருக்கொள்ளவும் செய்து வெற்றிகண்ட மகாசிற்பியான அவர் இதற்கு எவ்விதக் கைம்மாறும், செலவும் கூடப் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டார். அவர் மைந்தன்தான் இன்று மாமல்லபுரத்தில் சிற்பக் கலைக்கூடத்தின் மேலவராக இருந்து நமது தொன்மைக்கலை துளிர்த்து வளர்ந்து செழித்து கிளைக்கச் செய்துவர அரும்பணி யாற்றும் கேவாதப் பெருந்தச்சன் வார்சான ஸ்தபதி கணபதி பூம்புகார் படைத்த பெருந்தச்சன் கலைமாவளவன் ஆன நமது முதலமைச்சர் டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்களின் கனவை எல்லாம் நனவாக்கிக் கற்பனைகளை எல்லாம் கல்லில் உருவாக்கித் தமிழகத்தின் பீடும் பெருமையும் மலர்ந்து மணக்கச் செய்யும்பேறு பெற்றவரும் இக் கணபதியே!

தஞ்சைப் பெருங்கோயிலை எடுத்த மா சிற்பியை ராஜராஜப் பெருந்தச்சன் என்பது போல் பூம்புகாரையும் ராஜாஜி நினைவாலயத்தையும் என்னுவர்கோபடத்தையும் உருவாக்கின்ற தம்பி கணபதியை கருணாநிதிப் பெருந்தச்சன் என்று சொல்லும் பிற்கால வரலாறு வாழ்க கலைஞர்! வளர்க கலைகள்

இங்ஙனம் 35 ஆண்டுகட்கு முன்னர் உருவம் பெற்ற தமிழ்த்தாய் கம்பன் திருநாட்காலத்தில் எல்லோரும் காண எழிலரங்கில் கொலுவிருப்பாள். ஏனைய நாட்களில் ஏழையேன் அகத்தே அடைந்துகிடப்பாள் கம்பன் மணிமண்டபம் எடுக்க முனைந்த போது தமிழ்த்தாய் கோயிலுக்கும் திடம்

வகுத்து வரைபடமும் தயார் செய்து நில ஒதுக்கீடும் செய்துள்ளோம். முக்கோண அமைப்பில் வாய்த்த நிலம்; முழுதும் எவ்வித செயலுக்கும் உட்படாத புனிதமான தூய கன்னி நிலம்; இங்ஙனம் எல்லா வகையிலும் பொருத்தமான நிலைமை இருந்தும், ஆர்வம் இருந்தும் வழிதான் ஏற்படவில்லை.

கம்பன் அறநிலைப் பணிக்குப் பேருதவி யாயிருந்த அமரர் C. V. Ct. V. அவர்கள் தமிழ்த்தாய் கோயில் கட்டுவதற்கு தனியா ரிடம் வசூல் செய்யும் பணத்தைச் செலவு செய்யப்படாதென்றும் கம்பன் மணிமண்ட பம் பணி நிறைவேறியபின் நிதிநிலை அனு மதித்தால் செலவு செய்யலாம் என்றும் கிட்டத்தட்ட ஒரு வாக்குறுதியே பெற்றுக் கொண்டார் என்னிடமிருந்து.

அதனுல் இன்றும் என்னம்மை, என் தெய்வம், முன்னைப் பழைய மொழிக்கெல் லாம் மூத்த தமிழ்க்குமரி, என்னகத்தேதான் மூடிக்கிடக்கிருள். ஆம் குடத்துள் ஒளி விளக்காய் ஒளிர்கின்ற அன்னை தமிழ்த் தாயை குன்றில் சுடர்விளக்காய் ஏற்றிப் புகழ் புரிந்த ஒரு தனித் தமிழ்மகன், என்றும் மறவா என் நன்றிக் குரிய, நமது முதல மைச்சர், டாக்டர் கலைஞர் மு. கருணநிதி அவர்களே!

இன்று அவர்கள் இங்கே வெறும் செங் கல்களை அடுக்கிப் புதைவடை என்னும் அடிப்படையை இடவில்லை. வைகறை விளக்கை ஏற்றிவைத்து ஓங்கலிடை எழும்பி உயர்ந்தோர் தொழவிளங்கும் செம்பரிதியை வரவேற்று உடன் தோன்றும் தமிழ்த்தாயின் பேரழகை உலகமெலாம் கண்டு உய்ய உதவுகின்ற பேரறப் பெரும்பணியைத் தொடங்கிவைக்கின்ருர்.

சமய அடிப்படையற்ற, எச்சமயச் சார் பும் இல்லாத ஓர் அமைப்பு இக் கோயில். எல்லாச் சமயத் தவரும் ஒருசேர வந்து கூடி வழிபட உரிய ஒரு தனிப்பெருந்திருக் கோயில் இது. ஆம் இஃதோர் Secular Temple of worship ஆம்; இங்கே வேறு பட்ட சமயங்களைச் சேர்ந்த பலரும் மாறு பாடு இன்றி வந்து கூடி, மொழிவழியே ஒன்ருகி, மகிழக் கூடிய ஒருமைப்பாட்டுப் புனிதத்தன்மை நிலவும்.

மொழி, கலை, ஆகிய துறைகளில் இன்றைய தமிழக அரசைப்போல் பணி யாற்றிய மற்றோர் அரசைக் காண்பது அரிது இஃது உண்மை: வெறும் இச்சகமொழி அல்ல.

பூம்புகார்ப் புதுக்கியும், வள்ளுவன் கோட்டம் வகுத்தும், ராஜாஜி நினைவாலயம் எடுத்தும் மாமல்லபுரத்தை வளப்படுத்தியும், தொல்பொருளியல் துறையைச் செழிக்கச் செய்தும், இன்ன பல அரும்பணிகளை யெல்லாம் ஆற்றித் தமிழும், தமிழ்க்கலையும், தமிழரும் தலைநிமிர்ந்து நிற்கச் செய்த பெருமை இன்றைய தமிழக அரசையே சாரும்! இவ்வரசுக்கு ஏற்றம் அளிப்பது, எழிலுடன் ஆக்கம் அளிப்பது நமது அன்புக்கும் பெருமதிப்புக்குமுரிய டாக்டர் கலைஞரவர்களின் தலைமையே என்ருல் அது மிகையாகாது.

கண்ணிய நோக்கும், திண்ணிய நெஞ்சும், எண்ணிய இனிது முடிக்கும் ஆற்றலும், நிரம்பியவராய், பிறவிக் கலைஞ ராய், பெருந்தமிழ் அறிஞராய் விளங்குபவர் நமது முதல்வர் டாக்டர் கலைஞர் கருணநிதி யவர்கள் அவர்களுடன் பொறுப்பைப் பகிர்ந்து கொண்டு தமிழக அரசை நடத்திச் செல்லும், நாவலர் பேராசிரியர் எங்கள் மாதவன் முதலிய அமைச்சர்கள் யாவரும் தமிழ்மொழி தமிழ்க்கலை ஆகியவற்றில் எல்லையில்லா ஈடுபாடும் ஆர்வமும், புலமை யும் நிரம்பியவர்கள் எந்த வகையிற் பார்த்

தாலும் இப்படி ஒரு மனமும். ஒருநோக்கும், ஒரு போக்கும் கொண்ட, தமிழ் உளம் கொண்ட ஓர் அரசு இஃதே என்பதில் ஐய மில்லை.

இத்தகைய சிறப்புக்கள் நிறைந்த இந்த அரசு தமிழ்த்தாய் கோயில் எடுப் பதற்கு நிதியுதவி வழங்க முன்வந்திருப்பது முற்றிலும் இயல்பேயாகும் குயில் பாடு வதும், மயில் ஆடுவதும் தேன் இனிப்பதும், வியப்பென எவரும் கருதுவரே?

இந்தப் புனிதப் பணியால் இவ்வரசின் புகழ் தமிழ் உள்ள வரை, தமிழர் உள்ள வரை நின்று நிலவி என்றும் வாழும். இந்த இப் பிறவியில் மட்டு மின்றி என்றன் ஏழேழ் பிறப்புக்கும் என் நெஞ்சில் நன்றி தேக்கெறிந்து நிற்கும் உண்மைத் தமிழன் புடையோர் எல்லாரும் இவ்வரசுக்கும், கலைஞர் அவர்கட்கும் என்றென்றும் கடமைப்பட்.டுள்ளார்கள். என்பதனை ஈண்டுப் புலப்படுத்தி எல்லீர்க்கும் கரங்கூப்பிச் சிரந்தாழ்த்தி வணக்கம் கூறி பவித்திர மான, தமிழ்த் தாயின், தனிப் பெரும் கோயிலுக்கு அடிக்கல் நாட்டிக் கால் கோள் விழாவை ஆற்றியருளுமாறு நமது பேரன்புக்கும் பெருமதிப்புக்குமுரிய நமது முதலமைச்சர். டாக்டர். கலைஞர் கருணாநிதியவர்களை வேண்டிக்கொண்டு என்னப்பன் கம்பனுக்கும் என்றுமுளதென் தமிழுக்கும் நெஞ்சார்ந்த வணக்கம் நெடிது செலுத்தி வரவேற்புரையை நிறைவு செய்கிறேன்.

*வணக்கம்.*



டாக்டர் வ. சுப. மாணிக்கம், எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்டி.
தமிழ்ப் பேராசிரியர், ஆட்சிக்குழு உறுப்பினர்
முதன்மையர், இந்தியமொழிப் புலம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்
நாள் : 16—10—74

கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள்,
காரைக்குடி-1.

பேரன்புடையீர்,

நலம். பல்லாண்டு தமிழ்ப்பணி ஆற்றிவரும் கம்பன் கழகத்தின் எதிர்கால வளர்ச்சியும் ஆக்கமும் பற்றி நான் நெடுநாள் எண்ணியதை உங்கள் மதிப்புடைச் சிந்தனைக்கு எழுதுகின்றேன்.

1, கம்பன் ஆராய்ச்சி நிலையம் (Kamban Research Institute) ஒன்று ஏற்படுத்த வேண்டும். பொருள் நிலை பற்றித் தயங்காது இவ்வாறு ஒன்று தொடங்கி விடுவது நல்லது.

2. டாக்டர் தெ. பொ, மீ. பேராசிரியர், அ. ச. ஞானசம்பந்தன், பேராசிரியர், அ. சீனிவாசராகவன் என்ற பெருமக்கள் கம்பன் கழகத்தோடு பல்லாண்டு தொடர்புடைய அன்பர்கள். இப்போது ஓய்வு பெற்றிருப்பவர்கள். இந்த ஆராய்ச்சி நிலையத்தில் இவர்களை ஆராய்ச்சி அறிஞர்களாக அமர்த்திக் கொள்ளலாம். தெ. பொ. மீ, இயக்குநர் ஆக இருக்கலாம்.

3. ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தி இயக்குநர் முதலியோரை அமர்த்தி ஆராய்ச்சித் திட்டங்களையும் திட்டத்தின் ஆண்டுகளையும் அறிஞர்களின் ஊதியங்களையும் பிற செலவினங்களையும் கணித்து மத்திய அரசுக்கும் பல்கலைக் கழக மானியக் குழுவிக்கும் தமிழக அரசிற்கும் அனுப்பிவைத்து மானியம் கேட்கலாம். ஆராய்ச்சி மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளவும் நூல் நிலையம் அமைக்கவும் உதவி கேட்கலாம்.

இவ்வகையில் தாங்களும் கம்பன் கழக அன்பர்களும் சிந்திக்க வேண்டும் எனவும் என் கருத்து இசைவாயின், விரைவில் ஆராய்ச்சி நிலையம் அமைத்து வழிவகுக்க வேண்டும் எனவும் கேட்டுக்கொள்கின்றேன்.

அன்பன்,

(ஒப்பம்) வ. சுப. மாணிக்கம்

# கம்பன் அருளிய இராமாவதாரம்

## பரதநாட்டியம் விளக்கவுரை—கம்பன் அடிப்பொடி

ஒரு கலையின் மாண்பை எடுத்துக்காட்ட மற்ருெரு கலை உதவும். இஃது உலகம் ஒப்புக் கொண்ட ஒன்று. ஒவ்வொரு கலையும் தனக்கென உள்ள வரம்பினுள் நின்று கொண்டே அந்த வரம்பை மீற முயல்கிறது. ஏனென்ருல் உணர்த்தும் ஆற்றலுக்கும் மிஞ்சிய அளவில் அஃது உணர்வதாலே தான்.

அப்படியே சொற்கலையும் தன் ஆற்றலைக் கொண்டு உணர்த்த முயலும் முயற்சியில் தளர்ச்சியடையும் போது அதற்கு நடனக் கலை துணைபுரிய முன் வருகிறது.

கம்பன் கவிச்சக்கரவர்த்தி; அவனுடைய கவிகள் அற்புதமானவை; பாவம் செறிந்தவை. எனினும் அவைகளும் கூடக் கவிஞன் உணர்ந்தவற்றை, அவன் உணர்ந்த அளவு-அவன் நமக்கு உணர்த்த நினைக்கும் அளவு - உணர்த்த மாட்டாமல் தவிக்கின்றன. அப்படித் தவிக்கின்ற சொற்களுக்கு நடனக்கலை மிக நாசுக்காகக் கைகொடுத்து உதவுகிறது. அவற்றையெல்லாம் நடனத்தில் கண்டு நீங்கள் அனுபவிக்கக் கூடும். நடனத்தைக் கண்டு இன்புற எண்ணும் அன்பர்கள் இச் சிறு நூலை முற்றிலும் படிக்க வேண்டியது இன்றியமையாததாகும். இதைப்படித்துப் பொருளையும் சந்தர்ப்பத்தையும் நன்ருக விளங்கிக் கொண்டால் நாட்டியத்தைச் சரியாக ரசித்து மகிழ முடியும்.

### காப்பு

சகல உலகங்களையும் படைப்பதையும், காப்பதையும், அழிப்பதையும், பிரியாத - எல்லையில்லாத - விளையாட்டாக உடையவர் அவரே தலைவர்; அவருக்கே நாங்கள் அடைக்கலம் ஆவோம்.

**பூபாளம்] [ஆதி**

**உலகம் யாவையும்,**
**தாம்உள ஆக்கலும்,**
**நிலைபெ றுத்தலும்,**
**நீக்கலும், நீங்கலா —**
**அலகிலா—விளை**
**யாட்டுடை யார் அவர்**
**தலைவர்; அன்னவர்க்**
**கேசரண் நாங்களே!**

### அலாரிப்பு

இரக்கமற்ற பாவியாகிய மன்மதன் விசைமிக்க நீண்ட வில்லை எடுத்துக் கொடிய பாணங்களை அடுத்தடுத்து எய்து கொண்டேயிருக்கிருன். அதனுல் தீப்பற்றிய பஞ்சைப்போல் உள்ளம் பொசுங்கிக் கருகித் துன்பப் பட்டுக்கொண்டிருக்கிற பெண்களை நோக்கிப் பயப்படவேண்டாம், பயப்படவேண்டாம் என்று ஓர் ஆறுதல் அளிக்காத ஆண்மையும் ஆண்மையா?

**நாட்டைக்குறிஞ்சி] [திஸ்ரநடை**

**பஞ்ச ரங்கு தீயின் ஆவி**
**பற்ற நீடு கொற்றவில்**
**வெஞ்ச ரங்கள் நெஞ்ச ரங்க**
**வெய்ய காமன் எய்யவே**
**சஞ்ச லங்க லந்த போது**
**தைய லாரை உய்ய வந்(து)**
**அஞ்சல்! அஞ்சல்! என்கி லாத**
**ஆண்மை என்ன ஆண்மையே!**

''தாமரை மலரை விட்டுப் பிரிந்து, நான் செய்த தவப்பயனால் வந்து, மகாலட்சுமி இங்கே வசிக்கிறுள்'', என்று, குறுக்கும் நெடுக்குமாகக் கட்டப்பட்டுள்ள அழகுமிக்க கொடிகளாகிய தன் கைகளை ஆட்டி, அந்த மிதிலை நகரம் செந்தாமரைக் கண்ணனுகிய ராமனை ''வருக! விரைந்து வருக!'' என்று அழைப்பதுபோல இருக்கிறது.

[கொடிகளின் முன்பின் ஆட்டம் கவிஞன் கண்ணுக்கு அப்படித் தோன்றுகிறது.]

**வசந்தா] [ரூபகம்**

**மை அறு மலரின் நீங்கி**
**யான்செய்மா தவத்தின் வந்து**
**செய்யவள் இருந்தாள் என்று,**
**செழுமணிக் கொடிகள் என்னும்**
**கைகளை நீட்டி, அந்தக்**
**கடிநகர் கமலச் செங்கண்**
**ஐயனை ஒல்லை வாஎன்று**
**அழைப்பது போன்ற தம்மா!**

ஜனகன் வெள்ளிக்கூடத்தில் இராமன் இருக்கிறுன்; சிவதனுசு கொண்டுவரப் பட்டது. பயங்கரமான பெரியவில்; இராமனே இளம் பாலன். இவன் எப்படி இந்த வில்லை நாண் ஏற்றப் போகிறுன் என்று எல்லோரும் மலைக்கின்றுர்கள்.

''அழகுச் செல்வனுன இராமன் சீதையை மணக்கச் சம்மதம் என்று கூறிவிட்டால், ''கல்யாணம் செய்துகொள் அப்பா'' என்று கொடுப்பதை விடுத்து, கங்கைப் பெருநதியையே ஜடாபாரத்தில் அடக்கிய சிவபெருமானுடைய வில்லைக் கொண்டு வந்து இந்தப் பாலன் முன் வைத்தது எவ்வளவு அறியாமை'' என்பார்கள்.

**ஹிந்தோளம்] [ஆதி**

**''வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்**
**கொள்ளென முன்பு கொடுப்பதை அல்லால்**
**வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து இப்**
**பிள்ளைமுன் இட்டது பேதைமை'' என்பார்.**

''மெய்யுணர்வுடைய இந்த விசுவாமித்திர னுக்குச் சிறிதுகூட வெட்கமில்லை'' என்று ஒருத்தி கூறுகிறுள். ''ஜனக மன்னனை விடக் கொடியவர்கள் வேறு எவருமில்லை'' என்று வேறெருத்தி கூறுகிறுள். ''மனு குலத் தோன்றலாகிய இவன் இந்த வில்லைக் காலால் உதைத்து வளைக்காமற்போனுல் சீதை என்ற பேர்கூட இனி இல்லாமல் போய்விடும்'' என்று மற்றெருத்தி கூறு கிறுள்.

**காம்போதி] [ஆதி**

**''ஞான முனிக்கொரு நாண்இலை''**
**என்பார்;**
**' கோன்இவ னில்கொடி யார்இலை''**
**என்பார்;**
**''மானவன் இச்சிலை கால்வளை யானேல்**
**பீன தனத்தவள் பேர்இலள்'' என்பார்.**

பெண்டுகள் இப்படி எல்லாம் பலவாருகப் பேசிக் கொண்டிருக்க, நற்குணசீலர்கள் உத்ஸாக மொழி கூறிட, தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் புரிய, இராமன் எழுந்து சிங்கத் தைப் போலவும், ரிஷபத்தைப்போலவும், மேருமலையைப் போலவும், மதயானையைப் போலவும், கம்பீரமாக வில் இருந்த இடத் தை நோக்கி நடந்தான்.

**ஷண்முகப்பிரியா] [ஆதி**

**தோகையர் இன்னன சொல்லிட!**
**நல்லோர்**
**ஓகை விளம்பிட, உம்பர் உவப்ப,**
**மாகமடங்கலும், மால்விடை யும்,பொன்**
**நாகமும், நாகமும் நாண நடந்தான்.**

மேருமலையைப் போன்ற அந்தச் சிவதனுசை அணுகி, அதை எவ்வளவு அலட்சியமாக, லாவகமாகத் தூக்குகிறான் பாருங்கள்! கிடைத்தற்கரிய, சிறந்த மாணிக்கமான சீதைக்கு அணிவதற்காக ஏதோ ஒரு மண மாலையை எடுப்பதுபோல, அவ்வளவு எளி தாக அல்லவா எடுக்கிறான் இராமன்?

பிலகரி] [ஆதி

ஆடக மால்வரை அன்னது தன்னை
தேடரும் மாமணிச் சீதை எனும்பொன்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலை இதென்ன எடுத்தான்

வைத்தகண் வாங்காமல் இருந்தவர்கள் எல்லாம் இராமன் வில்லின் ஒரு முனையைக் காலால் உதைத்ததையும், நாணை மற்றொரு நுனியில் உள்ள குதையில் பொருத்தியதையும் அந்த க்ஷண நேரத்தில் காணவில்லை. ஆனால் கையினால் எடுத்ததைக் கண்டார்கள்; முறிந்த ஒலியைக் கேட்டார்கள். அவ்வளவு விரைவில் காரியம் நடந்து விட்டது.

மணிரங்கு] [ஆதி

தடுத்திமை யாமல் இருந்தவர், தாளில்
மடுத்ததும் நாண்நுதி வைத்ததும்,
நோக்கார்,
கடுப்பினில் யாரும் அறிந்திலர், கையால்
எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்

யுத்தம் என்று கேட்ட அளவிலே விம்மிப் பருக்கும் மலைபோன்ற, அழகிய வலிய தோளை உடையவன்; மன்மதன் போன்ற உருவினன்; அவன் மலர் பறித்துக் கொண்டிருந்தான். அவனை, கருமேகம் போன்ற கூந்தலையுடைய, குயில் போன்ற குரலையுடைய ஒருத்தி வந்து கண்ணைப் பொத்தினாள். ''யார்?'' என்று அவ்வழகன் கேட்டான். அவ்வளவுதான், நெருப்பைத் தொட்டவள் போலப் பொருமிப்பொருமி அழத்தொடங்கி விட்டாள். [என்னைத் தவிர உன்னைத் தீண்டக்கூடியவர்களும் உண்டா என்பது கருத்து.]

வாசஸ்பதி] [மிஸ்ர ஜம்பை

போர் என்ன வீங்கும் பொருப்பன்ன
பொலன்கொள் திண்தோள்
மாரன் அனையான் மலர்கொய்(து)
இருந்தானை, வந்தோர்
கார்அன்ன கூந்தல் குயில் அன்னவள்
கண் புதைப்ப,
'யார்?' என்ன லோடும், அனல் என்ன
அயிர்த்து உயிர்த்தாள்.

மிதிலை நகரில் ராமன் பவனி வருகிறான். நகரம் முழுவதும் ஒரே குதூகலமாக விளங்குகிறது. எங்கும் மகிழ்ச்சிப் பெருக்கால் பெண்கள் ஓடி ஆடித் திரிகிறார்கள். அது எப்படியிருக்கிறது என்று கம்பன் சித்திரிக்கிறான்.

மான் கூட்டம் பம்மிப் பதுங்கி மருண்டு துள்ளிக் குதித்து வருவதைப் போலவும், மயில் கூட்டம் தோகை விரித்து அசைந்தாடித் திரிவதைப் போலவும், நட்சத்திரங்கள் ஒளிவிடும் வானத்தில் அடுத்தடுத்து மின்னல்கள் பளிச்சிடுவதைப் போலவும், தேனீக்கள் ரீங்காரம் செய்து ஆர்ப்பரிக்கவும், கால்சிலம்புகள் ஒலிக்கவும், தேனொழுகு புதுமலர்களைச் சூடிய மாதர்கள் கூட்டத்தின் நடுவில் நுழைந்து பரபரப்பாய்த் திரிகிறார்கள்.

கல்யாணி] [ரூபகம்

மான்இனம் வருவ போன்றும்,
மயில்இனம் திரிவ போன்றும்,
மீன்இனம் மிளிரும் வானில்
மின்இனம் மிடைவ போன்றும்
தேன்இனம் சிலம்பி ஆர்ப்ப,
சிலம்பினம் புலம்ப, எங்கும்
பூநனை கூந்தல் மாதர்
பொம்'எனப் புகுந்து மொய்த்தார்

மை போன்ற கரிய கூந்தலும், சிவந்த வாயும், ஒளிமிக்க நெற்றியும் உள்ள ஒருத்தி இராமனைக் காண வந்தாள்; கண்டாள். உள்ளம் உடைந்து போனாள்; மனம் உருகுகின்றாள்.

> ''என் மனத்துள்ளே இந்த மாய்மாலக் கள்ளன் வந்து புகுந்து கொண்டான். அவன் திரும்ப வெளியேறிவிடாதபடி அவன் நுழைந்த வாயில் இருக்கிறதே. ஆம், கண் எனும் அந்த ஒளிமிக்க வாசலைக் கச்சிதமாக அடைத்து விட்டேன். ஆகவே தோழி! என்னை மஞ்சத்திற்கு இட்டுச் செல்''

என்று கூறுகிறாள்.

சாரமதி] [ஆதி

மைக்கரும் கூந்தல், செவ்வாய்,
வாளநுதல் ஒருத்தி உள்ளம்
நெக்கனள்; உருகு கின்றாள்;
''நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன்; போகா வண்ணம்
'கண்'எனும் புலம்கொள் வாயில்
'சிக்'என அடைத்தேன் தோழி!
சேருதும் அமளி'' என்றாள்.

இப்படி என் மாதர்கள் மொய்க்கின்றார்கள்? எல்லாம் இராமனைத் தரிசிப்பதற்காகத் தான்! இவ்வளவு ஆர்வத்துடன் புகுந்த இவர்கள் இராமனை எவ்வளவு தூரம் கண்டு மகிழ்கிறார்கள் தெரியுமா?

தோளைக்கண்டவர்கள் தோளிலேயே லயித்து விடுகிறார்கள்; வீரக்கழல்பூண்ட, தாமரை போன்ற திருவடியைக் கண்டவர்கள் அதிலேயே லயித்து விடுகிறார்கள். விசாலமான கையைக் கண்டவர்களும் அப்படித்தான். ஒளிமிக்க கண்களையுடையவர்களாயிருந்தும் இராமனை அடி முதல் முடிவரை எவர்தான் தீர்க்கமாய் கண்டறிந்தார்கள்?

ஹம்ஸாநந்தி] [தேசாதி

தோள்கண்டார் தோளே கண்டார்;
தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்;
தடக்கை கண்டாரும் அஃதே!
வாள்கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?

வண்டுகள் ஒலிக்கின்ற மலர்ச்சுமையைத் தாங்குகின்ற கூந்தலை உடையவள்; சிறந்த ஆபரணங்களை அணிந்தவள்; காற்சிலம்பும் இடைமேகலையும் கலீர் கலீர் என்று ஒலி செய்திட ஓர் அழகிய பூங்கொம்பு போல ஒய்யாரமாக நடந்து வந்தாள். ஆனால் (இராமனைக் கண்டு தன்வயம் இழந்து மயக்கியவளாய்) புலம்பிக் கவலைப்படும் தோழிமார்களால் கைத்தாங்கலாய்த் தூக்கிச் செல்லப்படுகிறாள்.

மோகனம்] [ஆதி

அலம்பு பாரக் குழலிஓர் ஆயிழை.
சிலம்பும், மேகலையும், ஒலிசெய்திட
நலம்பெய் கொம்பின் நடந்துவந்
தெய்தினாள்;
புலம்பு சேடியர் கைமிசைப் போயினாள்

பெண்கள் இவ்வண்ணம் அலுப்படைய, ராமனோ, குற்றமில்லாத மனத்து வசிட்டனும், வேதத்தைக் கரை கண்டவனான விசுவாமித்திரனும் வீற்றிருக்கும் திருமண மண்டபத்தை ஆயுதம் தாங்கிய அரசர் கூட்டத்துடன் சென்றடைந்தான்.

ஸ்ரீராகம்] [ஆதி

மாதர் இன்னணம் எய்த்திட வள்ளல்
போய்
கோதில் சிந்தை வசிட்டனும், கோசிக
வேத பாரனும் மேவிய மண்டபம்
ஏதி மன்னர் குழாத்தொடும் எய்தினான்

பூங்கொடி போன்ற சீதையைத் தந்த பூமா தேவி தன் மகளாகிய சீதையின் பாதம் மிக மென்மையானவை; நடக்கும்பொழுது தரை உறுத்தும்; என்று பயந்து நடை பாதை எங்கும் பசுந்தளிர்களையும், பன்னிற மலர்களையும், பரப்பினளோ என்று கருதுமாறு தான் அணிந்துள்ள சிறந்த ஆபரணங்களில் உள்ள ரத்தினங்கள் பூமியில் ஒளி பரப்ப நடந்து வந்தாள்.

சாரங்கா] [ஜம்பை

வல்லியை உயிர்த்தநில மங்கை இவள் பாதம்
மெல்லிய; உறைக்கும் என அஞ்சி, வெளி எங்கும்
பல்லவம் மலர்த்தொகை பரப்பினள் எனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்

தங்கத்தின் பிரகாசமும், மலரின் மணமும், சந்தனத்தின் குளுமையும், மின்னலின் அழகும் போலத்தன் திருமேனி விளங்க, அன்னப்பறவையும், தேவமாதரும், நல்லமுதமும் தோற்றுத் தலைகுனிய, அரசர் சபை கூடியிருந்த அழகிய மண்டபத்தை வந்து சேர்ந்தாள். ஜானகி.

[கானடா [ஜம்பை

பொன்னின்ஒளி, பூவின்வெறி, சாந்து பொதி சீதம்,
மின்னின்எழில், அன்னவள்தன் மேனியது மான,
அன்னமும், அரம்பையரும் ஆர்அமிழ்தும் நாண
மனஅவை இருந்தமணி மண்டபம் அடைந்தாள்

நெருங்கிச் சுருண்ட கூந்தலையுடைய சீதையைக்கண்டு, உலக முழுவதையும் சுற்றி வளைத்து ஒருபடித்தாய் ஆளும் ஆக்ஞா சக்கரத்தையுடைய தயரதச்சக்கரவர்த்தி

''எக்காலத்தும், ஏழு உலகங்களையும், ஆள்பவனுக இருந்தாலும் இன்றுதான் லட்சுமிதேவி வந்தடைந்தாள்; எத்துணைச் சிறந்த வெற்றி இது!''

என்ருன்.

பந்துவராளி] [ஜம்பை

துன்றுபுரி கோதைஎழில் கண்டுலகு சூழ்வன்(து)
ஒன்றுபுரி கோலொடு தனித்திகிரி உய்ப்பான்.
''என்றுமுல கேழும் அரசெய்தி உளனேனும்,
இன்றுதிரு எய்தியதி தென்னவயம்!''
என்ருன்.

சீதையைக் கண்டதும், அகில உலகத்திற்கும் கட்டளை இவன்தான் என்று கருதக்கூடிய முதல் அந்தணனுகிய விசுவாமித்திரன் என்ன எண்ணுகிருன் தெரியுமா?

''நஞ்சினையுடையதும், மாவடுப் போன்றதுமான கண்களையுடைய இவள் தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் திருமகளே என்றறிந்தால், பசியமலை போன்ற மேனியையும் பேராற்றலையும் உடைய இராமன் இந்த வில் ஒன்றை மட்டுமா, எழுமலைகளையுமே முறித்தெறிய மாட்டானு?''

என்று எண்ணுகிருன்.

தோடி] [ஜம்பை

அச்சென நினைந்தமுதல் அந்தணன் நினைந்தான்;
பச்சைமலை ஒத்தபடிவந்தடல் இராமன்,
நச்சுடை வடிக்கண் நங்கை இவள் என்ருல்,
இச்சிலை கிடக்கமலை ஏழையும் இருனே?

திருமணம்பந்தர்க்கு வந்து மணமக்கள் அமரவேண்டிய ஆசனத்தில் வெற்றி நலனும் பெருந்தகுதியுமுள்ள வீரனை இராமனும் வீரச்செயல்களுக்கெல்லாம் இனிய துணையான தூய்மையான சீதையும் அமர்ந்திருந்தனர். அஃது எப்படியிருந்ததென்ருல் இணை

261

தற்குரிய போகமும், அதற்கேற்ற நெறி யான யோகமும் போன்றிருந்தது.

சங்கராபரணம்] [ஜம்பை

**மன்றலின் வந்து மணத்தவிசு ஏறி.**
**வென்றி நெடுந்தகை வீரனும், ஆர்வத்(து)**
**இன் துணை அன்னமும், எய்தி இருந்தார்;**
**ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.**

சக்கரவர்த்தித் திருமகனை இராமன் முன் நின்று ஜனக மகாராஜன்

''மலர்மகளும், திருமாலும்போல நீ என் பெருமைக்குரிய மகளான ஜானகியுடன் என்றும் ஒன்றி வாழ்வாயாக!

என்று கூறி இராமச்சந்திரனின் தாமரை மலர் போன்றதும், விசாலமானதுமான கையில் குளிர்ந்த புனித நீரைத் தாரை வார்த்துச் சீதையைக் கொடுத்தான்.

சாமா] [ஜம்பை

**கோமகன் முன்ஜன கன்குளிர் நல்நீர்,**
**''பூமகளும் பொருளும்என நீ என்**
**மாமகள் தன்னொடும் மன்னுதி'' என்று,**
**தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்.**

கொழுத்துவிட்டு எரியும் வேள்வித் தீயில் குற்றமற்ற மந்திரங்கள் முழுவதையும் ஓதி நெய்யுடன் ஆகுதிகள் அனைத்தையும் மூன்று முறை அளித்து, சீதையின் தளிர் போன்ற கையைத் தன் விசாலமான கையால் பற்றி னன் இராமன்.

சாவேரி] [ஜம்பை

**வெய்ய கனல்தலை வீரனும் அந்நாள்**
**மையறு மந்திரம் மும்மை வழங்கா**
**நெய்யமை ஆவுதி யாவையும் நேர்ந்தே**
**தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்.**

அப்படி, சீதாதேவியின் கரத்தை ஸ்ரீராமன் பற்றியதும், பேரிகைகள் முழங்கின! சங்கு கள் ஒலித்தன! நான்கு வேதமும் கோஷித் தன; தேவர்கள் ஆடிப்பாடினர்; பல்கலை களும் ஆர்த்தன; பல்லாண்டு கோஷம் முழங் கின; வண்டுகள் ரீங்காரம் செய்தன; கட லும் ஆர்ப்பரித்தன.

கமாஸ்] [ஜம்பை

**ஆர்த்தன பேரிகள்; ஆர்த்தன சங்கம்;**
**ஆர்த்தன நான்மறை; ஆர்த்தனர் வானோர்;**
**ஆர்த்தன பல்கலை; ஆர்த்தன பல்லாண்டு;**
**ஆர்த்தன வண்டினம்; ஆர்த்தன வேலை.**

முடிசூடச் செல்ல வேண்டிய இராமன் அன்னை கைகேசியின் ஆணைமிது அவள் அரண்மனைக்கு வருகிறான். வந்து வணங்கிய வனைக் கைகேசி, ''உன்னிடம் ஒரு தகவல் தெரிவிக்க வேண்டும் என்பது உன் தந்தை யின் கட்டளை'' என்கிறாள். ராமன் பேசுகிறான் :-
''கட்டளை இட்டவர் என் தந்தையார்: அதை எனக்கு உரைப்பது தாயாராகிய தாங்கள்; இப்படி நேருமானால் நான் புண்ணியசாலியாவேன். என்னை விட அதிஷ்டசாலி யார்? வணக்கம்; தாயே யான் இங்கு வரநேர்ந்தது என் தவப்பயனே இதைவிடவேறு நன்மை என்ன இருக்கப் போகிறது? என் தந்தையும் தாயும் நீரே! கட்டளைக்குக் கீழ்ப்படிகிறேன் ஆணை பிடுங்கள்?''

கரகரப்பிரியா] [ஆதி

**''எந்தையே ஏவ, நீரே**
**உரைசெய, இயைவ(து) உண்டேல்,**
**உய்ந்தனென் அடியேன்; என்னின்**
**பிறந்தவர் உளரோ? வாழி!**
**வந்ததென் தவத்தின் ஆய;**
**வருபயன் மற்றொன் றுண்டோ?**
**தந்தையும் தாயும் நீரே!**
**தலைநின்றேன்; பணிமின்'' என்றான்.**

கைகேசி சொல்லுகிருள் :-

''கடல் சூழ்ந்த இவ் உலகம் முழுவதையும் பரதனே ஆட்சிபுரிய, நீ புறப்பட்டுச் சென்று நீண்ட பெருஞ் சடைகள் தாங்கி, அரும் பெரும் தவங்கள் ஆற்றி, வனத்தில் தங்கியிருந்து புண்ணிய நதிகளில் முழுகி, பதினன்கு ஆண்டு கழித்து நகருக்கு வா என்று கூறினன் மன்னன்'' என்ருள்.

**கரகரப்பிரியா] [ஆதி**

**''ஆழிசூழ் உலகம் எல்லாம்**
**பரதனே ஆள, நீபோய்த்**
**தாழ் இரும் சடைகள் தாங்கித்**
**தாங்கரும் தவம்மேற் கொண்டு,**
**பூமி வெம் கானம் நண்ணி,**
**புண்ணியத் துறைகள் ஆடி**
**ஏழ் இரண்டு ஆண்டில் வாஎன்(று)**
**இயம்பினன் அரசன்'' என்ருள்.**

இராமன் பேசுகிருன் :-

''அம்மா! அரசன் கட்டளையாக இல்லாமல் இருந்தால்தான் என்ன? உங்கள் கட்டளையை மறுப்பேன நான்? என்தம்பிக்குக் கிடைக்கும் செல்வம் எனக்குக் கிடைத்தது போல இல்லையா? இதைவிட எனக்கு என்ன நன்மை கிட்டப்போகிறது இந்தக் கட்டளையைத் தலைமேல் தாங்கிவிட்டேன். மலர் பூத்துக்குலுங்கும் வனத்திற்கும் இப்பொழுதே புறப்படுவிட்டேன்; தாயே! அனுமதியும் பெற்றுக்கொள்ளுகிறேன்.

**சாருகேசி] [ஆதி திஸ்ர நடை**

**மன்னவன் பணிஅன் ருகில்**
**உம்பணி மறுப்பெனே? என்**
**பின்னவன் பெற்ற செல்வம்**
**அடியனேன் பெற்ற தன்ருே?**
**என் இனி உறுதி அப்பால்?**
**இப்பணி தலைமேல் கொண்டேன்;**
**மின்ஒளிர் கானம் இன்றே**
**போகின்றேன் விடையும்**
**கொண்டேன்.**

வனம் சென்ற இராமனைத் திரும்ப அழைத்துச் செல்வதற்காகப் பரதன் சேனையுடன் வருகிருன். பெரும் படையை அக்கரையிலிருந்து கண்ட குகன், ராமனுடன் பொருதிப் போர் புரியவே பெரும்படையுடன் பரதன் வருவதாக நினைத்து பேசுகிருன்;

''அண்ணன் என்று எண்ணிப் பார்க்கவில்லை; புலி போன்ற தம்பி ஒருவன் உடனிருக்கிருன் என்பதையும் நினைத்துப் பார்க்கவில்லை; அதெல்லாம் போகட்டும், என்னை இவன் உதாசீனம் செய்வது போலல்லவா இருக்கிறது? இந்த எல்லையைக் கடந்து போயன்ருே போர் புரிய வேண்டும்? பரதன் என்னவோ அரசனுக இருக்கலாம்; அந்த அரசனின் மார்பிலே வேடர்களாகிய நாங்கள் எய்கிற அம்பு பாயமாட்டாதா? பார்க்கலாம்!''

**மலையமாருதம்] [திஸ்ரநடை**

**முன்னவன் என்று நினைந்திலன்;**
**மொய்புலி அன்னுன் ஓர்**
**பின்னவன் நின்றனன் என்றிலன்;**
**அன்னவை பேசானேல்,**
**என்இவன் என்னை இகழ்ந்த(து) இவ்**
**எல்லை கடந்தன்ருே?**
**மன்னவர் நெஞ்சினில் வேடர்**
**விடும்சரம வாயாவோ?**

இப்படிப் பேசுகிற குகன் தனது படையினரையெல்லாம்திரட்டி ஒரு போர்ப்பிரசங்கமே நிகழ்த்துகிருன்.

''நாட்டையே மனப்பூர்வமாகக் கொடுத்துவிட்டு வந்த எம்பெருமான் ஸ்ரீராமனுக்கு நாம் வசிக்கும் காட்டைக்கூட விட மனமின்றி, படை எடுத்ததைப் பார்த்தீர்களா? ஆகவே, தோழர்களே! அதோ பிரமாதமாக ஆடிப்பறக்கும் கொடிகளுடன் வரும் சேனை முழுவதையும் முட்டி மோதி அழித்து விட்டு தருமச் செல்வர்களே நாட்டை ஆளும்படியாகச் சாசனம் செய்து கொடுக்க வேண்டும். முதன்முதலிலே தங்கள் ஆட்சித்தலைவனைத் தேர்ந்துதெடுக்கும்

பெருமையை நீங்கள் அடைய வேண்டும்; சரிதானா?''

மலயமாருதம்] [திஸ்ரநடை

காடு கொடுத்தளன் நாயக
 னுக்குஇவர் நாம் ஆளும்
காடு கொடுக்கிலர் ஆகி
 எடுத்தது காணீரோ?
ஆடு கொடிப்படை சாடி
 அறத்தவரே ஆள
எடு கொடுத்தது பார்எனும்
 இப்புகழ் மேவீரோ?

அசோக வனத்திலே வாடி வதங்கி, வருந்திச் சோம்பித் துயரமே வடிவாய்ச் சமைத்துவீற்றிருக்கும் சீதா பிராட்டியின் திருமுன் ராவணன் வருகிறான், வந்து பிதற்றுகிறான்;

எனக்குத் துரோகி நான்தான்; பெண் உருக்கொண்ட, விடத்தைப் பூசிய அமுதத்தைப் உண்ணலாம் என்று ஆசைப்பட்டேன், காலம் கழிந்தே வருகிறது என் உள்ளத்தில் உறைகின்ற உம்மை மறந்துவிட்டுச் சாக முடியாமல் அல்லவா பயந்துகொண்டிருக்கிறேன். இந்த அடிமை உங்களைச் சரணாகதி அடைகிறேன் அமுதைஒத்தவரே!

தன்யாசி] [ஆதி

வஞ்சனேன் எனக்கு நானே!
 மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுதோய் அமுதம் உண்பான்
 நச்சினேன்; நாளும் தோய்ந்த
நெஞ்சு நேரான உம்மை
 நினைப்புவிட்(டு) ஆவி நீக்கி
அஞ்சினேன்; அடியனேன் உம்
 அடைக்கலம், அமுதின் வந்தீர்!

மேலும் பேசுகிறான் இராவணன் :

எந்தப்பெண்ணைப் பார்த்தாலும் நீராகவே நான தோன்றுகிறது; எப்பெயரைக் கேட்டாலும் உமதாகவே ஒலிக்கிறது! எதைப் பார்த்தாலும் கண்ணெதிரில் நீரே இருக்கின்றீர்! மன்மதன் எய்து கொண்டே இருக்கவும், அவனுடைய பஞ்சபாணங்களால் ஏற்படும் புண்கள் என் ஒருவனுக்கே ஏற்படும் படியும் ஆகிவிட்டது. இதுவரை இல்லாத விபரீதங்களை எல்லாம் உண்டாக்கி விட்டீர்!

சஹாரா] [ஆதி

பெண்ணெலாம் நீரே ஆக்கி,
 பேரெலாம் உமதே ஆக்கி,

கண்ணெலாம் நும்கண் ஆக்கி,
 காமவேள என்னும் நாமத்(து)

அண்ணல்எய் வாளும் ஆக்கி
 ஐங்கணைக்(கு) அரியத் தக்க

புண்ணெலாம் எனக்கே ஆக்கி
 விபரீதம் புணர்த்தி விட்டீர்!

ராவணனுடைய பிதற்றல்களுக் கெல்லாம் சுடசுடப் பதில் கொடுக்கிறாள் சீதை :-

''உணர்வற்ற இந்த உடலைப் பாது காத்துக் கொண்டு, உயிரை விட்டுப் புகழை அடையாமல், உன்முன் வெட்கம் கெட்டுப் போய் இருக்கவில்லை யான். குற்றமற்ற குணங்களையே ஆபரணங்களாக உடைய அந்த புனிதனாகிய ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியை இனியும்கூடத் தரிசிக்கலாம் என்னும் ஆசையினாலேதான் இருக்கிறேன் என்பதைத் தெரிந்துகொள்'!

பியாகடை]

ஊன் இலா ஆக்கை பேணி
 உயிர்புகழ் சூடா(து) உன்முன்

நான் இலா(து) இருந்தேன் அல்லேன்;
 நவையறு குணங்கள் என்னும்

பூண்எலாம் பொறுத்த மேனிப்
 புண்ணிய மூர்த்தி தன்னைக்

காணலாம் இன்னும் என்னும்
 காதலால் இருந்தேன் கண்டாய்.

மேலும் தன் உள்ளக்கிடக்கையை உணர்த்து கிருள் பிராட்டி :-

''ஏ, பாபி! எமனுலகை எட்டிஎட்டிப் பார்க்கும் என் உயிர் திருப்பி வந்து விடுகிறது. ஏன் தெரியுமா? போர்க்களத்திலே கேடய மலை போன்ற தம்பி இலக்குவன் பின்புறம் காத்து நிற்க, (ஸ்ரீராமன்) உன் தலைகள் பத்தினையும் தரையில் புரளச் செய்து, அரக்கர் குலம் முழுவதையும் தொலைத்து வாகை மாலை சூடி நிற்கும் அந்த அற்புதக் காட்சியைக் காணவேண்டுமென்று கிடக்கிறது ஓர் ஆழமான ஆசை''

தேவகாந்தாரி] [ஆதி

சென்றுசென்(று) அழியும் ஆவி
திரிக்குமால்: செருவில் சேமக்
குன்றுநின் றனைய தம்பி
புறக்கொடை காத்து நிற்பக்
கொன்று,நின் தலைகள் சிந்தி,
அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்றுநின்றருளும் கோலம்
காணிய கிடந்த வேட்கை

ராம-ராவணயுத்தம். இலங்காபுரியே அல்லோல கல்லோலப்படுகிறது. ராமனுடைய கோதண்டத்திலிருந்து ஓர் அம்பு புறப்பட வேண்டியது தான். என்ன என்ன விபரீத மாற்றங்கள் ஏற்பட்டுவிடுகின்றன!

மதம்பொழியும் யானைகளும் குதிரைகளும் சாய்கின்றன. மேருமலை போன்ற தேர்கள் சரிகின்றன. அஸ்திரம் பாய்கின்ற திக்கெலாம் காதுகள் செவிடு படுகின்றன; பரந்த கடலின் தெளிந்த நீரும் சேருகிக் கொப்புளிக்கின்றது. புலிபோலப் போர் புரியும் அரக்க மகளிரின் மலர்போன்ற கண்கள் எல்லாம் அருவிபோலக் கண்ணீரைக் கொட்டுகின்றன!

இவ்வளவு களேபரமும் எப்பொழுது? இரு நுனியிலும் மணிகள் கட்டிய, நீண்ட கோதண்டத்தின் நாண் கணகண கணகண என்று ஒலிக்கும் போதெல்லாம் தான்.

அடாணு] [ரூபகம்

படுமத கரிபரி சிந்தின!
பனிவரை இரதம்அ விந்தன!
விடுதிசை செவிடுபி ளந்தன!
விரிகடல் அளற(து)எ ழுந்தன!
அடுபுலி அவுணர்தம் மங்கையர்
அலர்விழி அருவிபொ ழிந்தன!
கடுமணி நெடியன னும்சிலை
கணகண கணகண எனுந்தொறும் !

ராம ராவணயுத்தம் மிகக் கடுமையாக நடந்துகொண்டிருக்கிறது. இறுதியில் ராகவனின் தூய அம்பு ராவணனை உயிர்குடித்துப் போரை முற்றுவிக்கிறது.

கோடியே கோடியே கோடி ஆயுளையும் அரிதின் முயன்று கொண்ட பெரிய தவமும், ''எந்த பகுதி மக்களாலும் வெல்லப்படாய்'' என்று சிவபெருமானால் கொடுக்கப்பட்ட வரமும், மற்றும் எட்டுதிசைகளுடன் உலக முற்றும் வென்று நின்ற தோள் வலியும், அழியும்படி செய்துவிட்டு, நெஞ்சில் நுழைந்து உயிரைக் குடித்து விட்டு, முதுகின் புறத்தே சென்றது ஸ்ரீராகவன்தன் தூய அம்பு.

முகாரி] [ஆதி

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெருந்தவமும், முதல்வன் முன்நாள்
''எக்கோடி யாராலும வெலப்படாய்''
எனக்கொடுத்த வரமும், ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும், தின்று, மார்பில்
புக்கோடி உயிர் பருகிப் புறம்போயிற்(று)
இராகவன் தன் புனிதவாளி !

போரெல்லாம் முடித்து, தந்தை சொல் காத்து, பதினன்கு ஆண்டுகளுக்குப் பிறகு ராமன் அயோத்தி வந்தடைகிருன். நாடெல்லாம் ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்திருக்கிறது. ஸ்ரீராமனுக்கு முடிசூட்டும் விழா நடைபெறுகிறது.

சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீராமனின் திருவடியை அனுமன் தாங்கவும், அங்கதன் உடைவாளை ஏந்தி நிற்கவும், பரதன் வெண் கொற்றக் குடையைப் பிடித்து நிற்கவும், லட்சுமண-சத்துருக்கன் இருவரும் வெண் சாமரம் பற்றி நிற்கவும், விரிந்த கடல் சூழ்ந்த உலகெலாம் போற்றி நிற்கும் வெண்ணெய் நல்லூர் வாழும் சடையப்பவள்ளல் குலத்தைச் சேர்ந்த ஒருவன் மணிமுடியை எடுத்துக் கொடுக்க, அதை வாங்கிக் குல குருவான வசிட்டன் ராமனுக்குச் சூட்டினன்



அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண் குடை கவிக்க
இருவரும் கவரி பற்ற
விரிகடல் உலகம் ஏத்தும்
வெண்ணெய்மன் சடையன்
வண்மை
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி!



# செல்வ வீடணன்

திரு. எஸ். கே. கம்பராமன்

---

பேராற்றல் கொண்டவர்கள் செருக்குக் கொண்டு உலகத்திற்குத் தீமை செய்தால் அதைக் கண்டு கவலைப்படாமல் ஒதுங்கிப் போகும் மக்கள் கோடி கோடியாக உள்ளனர். தீமையை எதிர்த்து முறியடிப்பவர்கள் ஆயிரம் வருடங்களுக்கு ஒருமுறை தான் தோன்றுவார்கள்.

மக்கள், தீமையை எதிர்த்துப் போராடாமைக்குக் காரணம் சுயநலமே. சுயநலத்தை மறைக்க அவர்கள் பேசும் பேச்சு வேதம் போலப் புலப்படும்.

சுயநலத்தை மறந்த சான்றோர்கள் அநியாயத்தை எதிர்க்கிருர்கள். அதனல் துன்பத்தை அனுபவிக்கிருர்கள். பழிச்சொற்களுக்கும் ஆளாகின்றனர்.

W. G. ஹோல் என்பவர் ''கடவுட் பித்தர்கள்'' என்ற தலைப்பில் ஒரு செய்யுள் எழுதியிருக்கிருர். அதன் ஆரம்ப வாசகம்.

கடவுள் தமது பித்தர்களை விதவிதமான வேஷங்கள் தரிப்பித்து இந்த உலகிற்கு அனுப்புகிறபோது, அவர்களுக்குப் பின்வருமாறு உபதேசித்தார் : ''செல்லுங்கள் உலகத்திற்கு ; காலத்திற்கு ஒவ்வாத ஞானேபதேசத்தைச் செய்யுங்கள். துன்பங்களை அறிந்து அனுபவியுங்கள்; மாறுதலுக்கான வழியைத் தயாராக்குங்கள்.

செவிடர்களாகப் போங்கள் ; யாருக்கும் இணங்காதீர்கள் ; எது புத்திசாலித் தனமான மார்க்கம் என்று சொல்கிருர்களோ, அதனை எப்பொழுதும் ஒதுக்கிவிட்டுச் செல்லுங்கள். (காந்தியடிகள். 480)

கடவுட் பித்தரில் முதல்வரான நம் காந்தியடிகளை ஆங்கிலேயரின் அடிவருடிகளான மகாபாதகர்கள் கூறிய வெறுப்புரையும் பழிப்புரையும் இகழ்ச்சி உரையும் கேட்டு மனப்புண் பெற்றிருக்கிருேம்.

ஆங்கிலேய அரசை மதித்துத் துதித்துப் புகழ்ப்பாடல்கள்பாடி ராவ்சாஹிப், பகல் சாஹிப் பட்டங்களைப் பெற்ற மகாபாவிகளையும், அவர்களது சந்ததிகளையும் நாம் இன்றும் காண்கிருேம்.

நம் பாரத நாட்டு ஆஸ்த்தான மஹாகவி பாரதியார்

அச்சமும் பேடிமையும்
அடிமைச் சிறுமதியும்
உச்சத்திற் கொண்டாரடி
ஊமைச் சனங்களடி

என்றும்

மானம் சிறிதென்று எண்ணி
வாழ்வு பெரிதென்று எண்ணும்
ஈனர்க்கு உலகம் தன்னில்
இருக்க நிலைமை உண்டோ

என்றும்

தேவி கோவிலில் சென்று
தீமை பிறர்கள் செய்ய

ஆவி பெரிது என் றெண்ணி
அஞ்சிக் கிடந்தாரடி.

என்றும் உள்ளம் வெதும்பிப் பாடியதை உலகம் அறியும்.

இராவணன் வரபலத்தாலும் படை பலத்தாலும் செருக்குக் கொண்டான். அவனுடைய செருக்காகிய நெருப்பை வளர்க்கும் நெய்யாக அவன் உதித்த பிரம்ம குலம் அமைந்தது. அவற்றிற்குமேல் அவனுடைய பேரழகு அவனை வரம்புகடந்து செல்லத் தூண்டியது. (வால்மீகி "இரா வணன் கரும்பு வில்லை எந்தினால் மன்மதன் போல் இருப்பான் அவனுக்குக் கரும்புவில் எந்தாத குறை ஒன்று உண்டு என்பார்")

இராவணனுடைய அதிகாரம் தேவர் களை வேலைக்காரர்களாக்கிற்று. மூவர்களை மூங்கையர்களாக்கிற்று. அவன் முன் பேசு வதற்கு எவர்க்கும்துணிவு கிடையாது. அவன் ஊடற்காலத்திலும் பணியாத பேராண்மை யாளன். இராவணன் மனிதர்களைக் காலால் தேய்க்கும் சிற்றெறும்பாக மதித்தான். அவன் மனிசர், மனிசர் என்றுதான் பேசுவான். (மனிசர் என்பது எளனப்பழிப்புச் சொல்)

இத்தகைய இராவணேச்சுவரன் நெறி கெட்டு நடந்தபோது அவனை எதிர்த்துப் பேசியவன் விடணன்.

இன்று இராவணனைச் சால்புமிக்கான் என்று பேசுபவர்கள் உள்ளனர். பழங்காலச் சான்றோர்கள் அங்ஙனம் பேசியதை அறி யோம். மெக்காலேயின் கல்வி மரம் இராவண பக்திக் கனியை வழங்கி உள்ளது.

மெய்ஞ்ஞானியாகிய, திருநாவுக்கரசர், கொடுவலி அரக்கன் என்றும் (56. 10) உணர்விலி அரக்கன் என்றும் (59. 10) வரைஎடுத்த தூர்த்தன் என்றும் (288. 10) பேசியதை உலகம் அறியும்.

இராவணனை விடணன் எதிர்த்ததற்குக் காரணம் இராச்சிய ஆசையே என்று பலர் கூறுகின்றனர். வால்மீகியும் விடணனின் இராச்சிய ஆசையைக் குறிக்கிறார். பதவி ஆசையால் ஆட்சியை விரும்புகின்றவர் களுக்கும், நாட்டு நலங் கருதி ஆட்சியை விரும்புகின்றவர்களுக்கும் உள்ள வேறு பாட்டைச் சிந்திக்க வேண்டும். இராவணன் ஆட்சியில் நல்லோர்கள் நலிந்தனர். தீயோர்கள் வளர்ந்தனர். இராவணன் தன்னைச் சார்ந்தவர்க்கு நன்மை செய்தான். மற்றவர்களைக் காலால் தேய்த்து உருக் குலைத்தான். அரக்கனின் சலுகை பெற்ற வர்கள் செருக்கித் திரிந்தனர்.

உலக மக்களை நேசித்த விடணன் நல் லாட்சி அமைய வேண்டுமே என்று கவலைப் பட்டான். அண்ணனுக்கு அறிவுரை கூறினான். அறவுரை கூறினன். அனைத் தும் பாழாயின. இராமன் உதவியினால்தான் நல்லாட்சி அமைய முடியும் என்று விடணன் முடிவு கட்டினன். நல்லாட்சி அமைய வேண்டும் என்பதற்காகவே விடணன் இராமன் பக்கம் சேர்ந்தான். விடணன் பற்று நல்லாட்சிப் பற்றே பதவிப் பற்று அன்று.

வால்மீகி உருவாக்கிய விடணன் அறச் சிந்தனை உடையவன். சூர்ப்பணகை" இராக் கதர் குலத்தில் பிறந்து இராக்கத ஆசா ரத்தை மேற்கொள்ளாத விடணன் என் சகோதரன்" என்று பேசுகிறாள் விபீஷணஸ்து தரமாதமா : நது ராக்ஷஸ சேஷ்டித : ஆரண்ய.)

விடணன் அறநெறியை உறுதிப்படப் பேசுவதில் வல்லவன். அவனுடைய சொல் வன்மையை வால்மீகி வியந்து பேசினர். விடணன் சொல்லைக் காண்போம்.

"அண்ணா சீதை மஹாஸர்ப்பம் போன்றவள். அவளுடைய மார்பு அந்தப் பாம்பின் பயங்கரமான படம். அவளைப் பற்றிய தீய எண்ணம் உடனே கொல்லும் விஷம். அவளுடைய புன்சிரிப்பே கூர்மை யான விஷப்பல். அவள் கவலைகொண்டு

முகத்தை வைத்திருக்கும் ஐந்து விரல்களே அந்தப் பாம்பின்தலைகள். பெரிய தேகத்தை உடைய அந்த ஸர்ப்பம் கடிக்க வேண்டியது இல்லை. தொட்ட மாத்திரத்திலேயே கொல்லும்'' ன்று கூறுகிருன்.

வீடணன் மொழி கேட்ட பிரஹஸ்த்தன் ''எனக்கு தேவர்கள் முதலானவர்களால் பயம் இல்லை. அற்ப மனிதர்களைக் கண்டு நாம் பயப்பட வேண்டுமா?'' என்ருன்.

அதுகேட்ட வீடணன் ''நம் பேரரசர் இயல்பாகவே காம மயக்கத்தில் ஈடுபடுபவர் கொடியவர். ஆராய்ந்து எச்செயலும் புரியா தவர் நீங்கள் அவரைத் திருத்தவேண்டும். நீங்கள் பார்வைக்கு அரசருக்கு நண்பர் களாய் இருக்கின்றீர்கள்- ஆராய்ந்து பார்த் தால் நீங்கள் தாம் அரசரின் பகைவர்கள்''. (இத சத்துரு)

மன்னர் விருப்பப்படிபேசி நீங்கள் எல்லா அரக்கர்களையும் நாசம் செய்யப் போகிறீர்கள். அளவிட முடியாத பேருடலை யும் ஆயிரம் தலைகளையும் தணியாத ஆற்றலை யும் பெற்ற மஹாஸர்ப்பம் உங்களுடைய அரசனைச் சுற்றிக் கொண்டிருக்கிறது.

மன்னனை இலக்குவன் என்னும் பெருங் கடல் விழுங்கக் காத்துள்ளது. அக்கடலின் நடுவில் 'இராமன் என்னும் வடவா முகாக்கினி சீறிக் கொண்டு நிற்கிறது. அக்கனல் அரசனை அணுகுவதற்கு முன் நாம் பாதுகாக்க வேண்டும்.

அரசனுக்கு விருப்பமில்லாமற் போனு லும் நாம் ஒன்று சேர்ந்து பலாத்காரமாய்ச் சீதையை இராமனிடம் ஒப்படைப்போம் என்று பேசினுன்.

வீடணன் மொழிகள் அவன் அறப் பற்றையும், இடித்துரைக்கும் ஆற்றலையும் சொல்வன்மையையும் நமக்கு உணர்த்து கின்றன.

வீடணன் இராவணனை விட்டு விட்டு இராமன் பால் சரண் புகுகிருன். அவனை ஏற்கக் கூடாது என்று அனைவரும் பேசினர். மாருதி ''இவன் நல்லவன் ஏற்கத் தக்கவன்'' எனருன். பெருமான் வீடணனை ஏற்றுக் கொண்டான்.

தன்பக்கல் வந்த வீடணனுக்கு இராமன் இலங்கை ஆட்சியை வழங்குகிருன். இவ் வாறு ஆட்சி வழங்குவதைத் தொல்காப்பியம் ''கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்'' என்று பேசும். (புறத்திணை. 12) இதற்கு உரை வழங்கிய நச்சினர்க்கினியர் ''இராமன் இலங்கை கொள்வதற்குமுன் வீடணற்குக் கொடுத்த துறையுமது'' என்று எழுதினர்.

இராமன் இலக்குவனைப் பார்த்து இளையோய் நீ கடலிருந்து தண்ணீர் கொண்டுவா. வீடணன் பேரறிஞன். அரசை விரும்பாதவன். நான் இவன் பால் கொண்ட அன்பால் அரசை வழங்குகிறேன். இவனுக்கு அபிஷேகம் செய்க'' என்ருன். இலக்குவன், வீடணனை இலங்கைக்கு வேந்தனைகப் பட்டம் கட்டினுன். இது வால்மீகி குறித்த வீடணன்.

வால்மீகி அறிமுகப்படுத்தும் வீடணன் அறச்சிந்தனையாளன். அச்சம் அறியாதவன் அவன் கொடுங்கோலை அகற்றிச் செங்கோலை நிலைநாட்டத் துணிந்தவன். கவிச்சக்கர வர்த்தி கம்பன் உணர்த்தும் வீடணன் இறைவன் திருவருளால் நல்லாட்சி அமைக்கப் பாடுபடும் அநுபூதிச் செல்வன். வால்மீகி கண்ட வீடணனுக்கு இராமபிரான் சத்தியத்தை நிலைநாட்டும் பேரரசன். கம்பன் கண்ட வீடணனுக்கு இராகவன பிறவிப் பிணிக்கு மருத்தாக மானிட உருவில் வந்த பரம்பொருள்.

டாக்டர் திருமதி பிரேமாநந்தகுமார் அவர் கள் ''ஒரேகதை ஆனல் ஒருவார்ப்பு அல்ல. ஒரே கருத்து ஆனல் ஒரே அச்சல்ல'' என்று வரைந்தது மீக்க உவகை தருகிறது (கோவை கம்பன் மலர். 1992) அத்தொடர் கள் கம்பன் இலக்கியத்திற்குக் கொடுக்கப் பட்ட கற்பனை வடிவம்,

கவிச்சக்கரவர்த்தி சில பாத்திரங்களை

வால்மீகி வழங்கிய அச்சில் வார்த்து இருக்கிறான், ஆனால் அவன் வார்ப்புக்கு மேற்கொண்ட பொருள்கள் வால்மீகிக்குக் கிட்டாத அரும்பொருள்கள். அப்பொருள்களை வழங்கியவர்கள் ஆழ்வார்கள்.

ஆழ்வார்கள் வழங்கிய பொன்னை உருக்கி அனுமன், பரதன் போன்ற பாத்திரங்களைக் கவிச்சக்கரவர்த்தி அமைத்திருக்கின்றான்.

இராமன் சீதை போன்ற சாத்திரங்களைப் படைக்கக் கவிச்சக்கரவர்த்தி மேற்கொண்ட அச்சுகள் அவன் உள்ளத்தில் ஆட்சிபுரியும் பக்தி உணர்வுகள் அமைத்தவை.

வீடணன் என்னும் பாத்திரம் மட்டும் இறையருளில் வார்க்கப்பட்ட தெய்விகப் பாத்திரம். இப்பாத்திரத்தை கவிச்சக்கரவர்த்தியின் இதயத்தில் இருந்து பரம்பொருளே படைத்திருக்கிறது. ஆகையினால் வீடணன் சமயத்தொண்டர்களுக்கு வழிகாட்டும் வான்பொருளாகத் துலங்குகிறான்.

வீடணனைச் சமயக் கண்கொண்டு பார்த்தால் நமக்குப் பல மெய்ப்பொருள்கள் தோன்றும். உலகக் கண்கொண்டு பார்த்தால் வீடணன் வேறுவிதமாகத் தோன்றுவான். அப்போது நமக்குப் பொய்ப்பொருள்தான் தோன்றும்.

இராவணனை இலட்சிய நாயகனாகக் கொண்டவர் மைக்கேல் மதுசூதனதத்தர் அவர் ஹோமர் பாணியில் வங்க மொழியில் இராமகாதையைப் பாடினார். ஏசுகிறுஸ்துவில் உறங்கும், விசுவாசியான தத்தர் வீடணனை ஐந்தாம்படை என்றார். மெக்காலேயின் வழியிற் செல்லும் தத்தர் இங்ஙனம் பேசியதில் அதிசயம் இல்லை. டாக்டர் சுகுமார்சென் என்பவர் எழுதிய வங்க இலக்கிய வரலாற்றை பார்க்கும்படி அறிஞர்களைக் கேட்டுக் கொள்கிறேன். (18 ஆம் பகுதி)

தென்னாட்டு வைணவர்கள் சரணாகதியைப் பற்றிப் பேசும்போது வீடணனையே மேற்கோள் காட்டுவார்கள். அவர்கள் வீடணனை விபீஷணஆழ்வார் என்பார்.

கவிச்சக்கரவர்த்தி கம்பனைப் பார்த்தால் இராவணன் தம்பி ஆழ்வாராக வளர்ந்தது நன்கு புலனாகும். கவிச்சக்கரவர்த்தி வீடணனை இலட்சியப் பாத்திரமாகப் படைத்ததற்குக் காரணம் ஆழ்வார்களே. பெரியாழ்வார் :

மன் உடைய வீடணற்கா மதில் இலங்கைத்
திசை நோக்கி மலர்க்கண் வைத்த

என்னுடைய திருவரங்கற்கு அன்றியும்
மற்று ஒருவர்க்கு ஆள் ஆவரே'' என்று

திருவாய் மலர்ந்தருளினார் (412)

பரம்பொருளே வீடணன் இருக்கும் இலங்கையை நோக்கிய வண்ணம் இருக்கிறான் என்றால் அவன் அறச் சிந்தனையாளனாகவும் கடவுட்பித்தனாகவும் தன்னலங் கருதாத்தகவாளனாகவும் பிறர்நலம்கருதும் பெரியோனாகவும் வாழ்ந்திருக்க வேண்டும் என்று கவிச்சக்கரவர்த்தி யூகித்து அறிந்து கொள்கிறான்.

அதனால் வால்மீகி வழங்கிய அச்சில் சரணாகதி என்னும் பொன்னை உருக்கி வார்த்து விபீஷண ஆழ்வாரைக் கவிச்சக்கரவர்த்தி உருவாக்கியுள்ளான்.

ஆழ்வார்களின் சொற்கள் ஒவ்வொன்றையும் கவிச்சக்கரவர்த்தி கம்பன் உபநிடத வாக்கியங்களாகக் கருதிப் போற்றுகிறான். ஆகையினால்தான் ஆழ்வார்களின் பாசுரத்தில் வரும் ஏகாரங்களும் உம்மைகளும் கூட அவன் இதயத்தில் பேருணர்வை ஊட்டுகின்றன. காதலியின் சிறு கண்ணசைவு கூடக் காதலனுக்குப் பேருணர்வை ஊட்டும் என்பதை இங்கே நினைவு கூற வேண்டும். (கம்பன் 322)

தென்திசை இலங்கை நோக்கி என்பர்
தொண்டரடிப் பொடியாழ்வார்

வீடணனை நமக்கு அறிமுகப் படுத்தும் கம்பன் முதலில் அவன் உறங்கும் இடத்தை யும் அவனுக்கு நிழல்தர அமைந்த கற்பக மரத்தையும் பக்தியோடு விவரிக்கிறான்.

பளிக்கு வேதிகைப் பவளத்தின்
கூடத்துப் பசுந்தேன்
துளிக்கும் கற்பகப் பந்தரில்
கருநிறத்தோர் பால்
வெளித்து வைகுதல் அரிது என
அவர் உரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமம்

அன்னான்தனை உற்றான். இப்பாசுரத் தைப் பெரியாழ்வாரே கம்பன் வாயிலாகப் பாடுகிறார் என்று தோன்றுகிறது (4970) இராமன் வெளிப்படையாக உள்ள தருமம். விபீடணன் ஒளித்து வாழ்கின்ற தருமம். இராயபிரானை சரண்புக வருகிற வீடணன்

அறம்தலை நின்றவர்க்கு
அன்பு பூண்டனென்
மறந்தும் நன்புகழ் அலால்
வாழ்வு வேண்டலென் என்று
பேசுகிறான்.

இதனால் வீடணன் அரசாட்சியையும் அதனால் வரும் புகழையும் விரும்பவில்லை என்று தெரிகிறது.
வீடணன்

எல்லையில் பெருங்குணத்து
இராமன் தாளிணை
புல்லுதும் புல்லியிப்

பிறவி போக்குதும் என்று தன்னு டைய குறிக்கோளைத் தெளிவாகப் பேசு கிறான்.

வீடணனின் அமைச்சனாகிய அனலன்

அறநிலை வழா அமையும்
ஆதிமூர்த்தி பால்
நிறைவரு நேயமும்
நின்ற வாய்மையும் பெற்றவன்

என்று வீடணனின் பண்பை மயிந்தன்பால் கூறுகிறான். வீடணனும் இராமபிரானும் சந்திக்கும் காட்சியை கவிச்சக்ரவர்த்தி பத் திச்சுவைநனி சொட்டச் சொட்டப் பாடு கிறான். கடவுள் முன்னிலையில் பக்தன் எப்படி நடந்து கொள்வான் என்பதை இங்கே பார்த்தால் நன்கு தெரியும்.

வீடணன் கண்ட இராமபிரானைக் கவிஞர் கோமான் இங்கு அழகோவியமாகத் தீட்டி யுள்ளான் அரக்கர்களுக்கு ஆற்றாமல் தேவர் கள் முறையிட்டபோது திருமால் அரவணை யிலிருந்து எழுந்த தோற்றத்தை இங்கே நினைவு கூர்கிறான் கவிஞன். இங்குள்ள பாடல்கள் கம்ப சித்திரம்.

வெள்ளிவெண் கடலுள் மேனாள்
விண்ணவர் தொழுது வேண்டப்
பள்ளிதீர்த்து இருந்தான் என்னப்
பொலிதரு பண்பினானை
என்றும்,

படர்மழை சுமந்த காயம்
பகர்வரும் அமரர் கோமான்
அடர்சிலை துறந்தது என்ன
ஆரமதிர் மார்பினானை
என்றும்,

பெற்றவன் அளித்த மோலி
இளையவன் பெறத்தான் பெற்ற
சிற்றவை பணித்த மோலி
பொலிகின்ற சென்னியானை

என்றும் கவிச்சக்கரவர்த்தி பாடிய பாசுரங் கள் கடவுட் பித்தருக்குத் தேனாக அமுதாக இனிக்கும் இப்பாசுரங்களை வைணவ உரை யாசிரியர்கள் மேற்கோள் காட்டும் பேற்றை இழந்தது சான்றோர்களுக்கு மனக்குறை யாக இருக்கிறது. என் ஆசிரியப்பிரான் அமரர். புருஷோத்தமநாயுடு அவர்கள் ஈட்டின் தமிழாக்கத்தில் இராமவதாரப் பாசு ரங்களை மேற்கோள் காட்டித் திருவாய் மொழியின் தாகத்தைத் ஒருவர் தீர்த்திருக் கிறார்.

இராமபிரானைக்கண்ட வீடணனின் மெய்ப்பாட்டையும் அவனுடைய இதயத்தில் மாலைக்கால முல்லையாக அரும்பும் பேருணர்வையும் அமுதக்கவியாக வடித்திருக்கிறன் கவிச்சக்கரவர்த்தி.

வீரனை நோக்கி அங்கம்
    மென்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர்
வார நெஞ்சு உருகிச் செங்கண்
    அஞ்சன மலை அன்று ஆகில்
கார்முகில் கமலம் பூத்தது அன்று
    இவன் கண்ணன் கொல்லாம்
ஆருள் சுரக்கும் நீதி
    அறநிறம் கரிதோ என்றான்,

தன்னை வணங்கிய வீடணனுக்குப் பெருமான் மலர்க் கையால் இருக்கை நல்குகிறன். அமர்ந்த வீடணனை நோக்கி "ஐயனே! பதினன்கு உலகமும் எனனுடைய பெயரும் நிலைத்து நிற்கும்வரை இலங்கைச் செல்வம் நினக்கே உரியது" என்கிறன்.

ஏழிரேடு ஏழாய் நின்ற
    உலகும் என்பெயரும் எந்நாள்
வாழும்நாள் அன்று காறும்
    வாள் எயிற்று அரக்கர் வைகும்
தாழ்கடல் இலங்கைச் செல்வம்
    நின்னதே தந்தேன்

என்று இராமபிரான் பேசிய பேச்சுக்கு மூலம் பெரியாழ்வார் பாசுரமே.

—பெரியாழ்வார்

மின்னிலங் கும்பூண்
    விபீடண நம்பிக்கு
என்னிலங்கு நாமத்து
    அளவும் அரசு என்ற

மன்னலங்காரன் என்று திருவாய் மலர்ந்தது கவிச்சக்கரவர்த்தியின் இதயத்தில் இருந்து தக்க சமயத்தில் உதவி இருக்கிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில் இன்னிசை வள்ளல் அருணசலக் கவிராயர் வழங்கிய கீர்த்தனை ஒரு காலத்தில் தமிழ்நாட்டில் பட்டி தொட்டி தோறும் அரசு செலுத்திற்று.

இந்தா விபீஷணு லங்காபுரி ராச்சியம்
தந்தேன் தந்தேன் தந்தேன் தந்தேன்
காருள் ளளவும் கடல்
நீருள் ளளவும் ஈரேழ்
பாருள் ளளவும் என்றன்
பேருள் ளளவும்
தந்தேன் தந்தேன் தந்தேன் தந்தேன்

இந்தக் கீர்த்தனை தமிழ் உருக்கொண்ட அமிழ்தோ அமிழ்துருக் கொண்ட தமிழோ அறியோம். கவிராயர் கீர்த்தனையை மதியாத இசையுலகு ...... (என்ன சொல்ல)

ஆழ்வார் செல்வ விடணற்கு நல்லான் என்ருர். செல்வம் என்னும் சொற்கு கவிச்சக்கரவர்த்தி இறைவன் திருவடி என்றே பொருள் கொண்டான். செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே என்று திருமுறை நயமாகவும், உறுதியாகவும் பேசும் அத் தொடர் காட்டும் வழியிலே சென்று மெய்ப் பொருளைக் காணுகிறன் கவிஞன்.

அடைக்கலம் புகுந்த விடணனுக்கு முடி சூட்டுக என்று இராமபிரான் இலக்குவனைப் பணிக்கிறன். அப்போது செல்வ வீடணன்

களவியல் அரக்கன் பின்னே
    தோன்றிய கடன்மை தீர
இளையவற் கவித்த மோலி

என்னையும் கவித்தி என்று கூறிச் சரணுகதி தத்துவத்திற்கு மணிமுடி சூட்டுகிறன். இங்கே "திருச்சித்ர கூடம் தன்னுள் அரசமர்ந்தான் அடிசூடும் அரசை அல்லால் அரசாக எண்ணேன் மற்று அரசுதானே" என்று குலசேகரப் பெருமாள் திருவாய் மலர்ந்த பாசுரம் நினைவுக்கு வருகிறது.

செல்வன் கழலே செல்வம்; இலங்கை அரசு செல்வம் அன்று; என்று வீடணன்

கருதுகிருன். வீடணன் இராமன் தாளினை புல்லுதும் புல்லியப் பிறவி போக்குதும் என்றும் அழிந்தது பிறவி என்றும் கூறியது சத்திய வாசகம் என்று உணர வேண்டும்.

திருமங்கையாழ்வார்
வில்லானைச் செல்வ
விபீடணற்கு வேருக
நல்லானை நாடி
நறையூரிற் கண்டேனே

என்று பாசுரம் இட்டார் வீடணற்கு நல்லான் என்ற தொடர் இறைவனுக்கும், பக்தனுக்கும் இடையே உள்ள அன்பைக் காட்டுகிறது.

வீடணனின் இதயப் பாங்கை அறிந்த பரம் பொருளாகிய இராமபிரானின் திரு உள்ளம் உருகிற்று. ஒரு நிமிடம் இராமனுக்கு வீடணன் பரதனுகவே காட்சி தருகிருன். அயோத்தியை விட்டு வந்த பரதனும் இலங்கையை விட்டு வந்த வீடணனும் ஒரே பாங்குடையார் என்பதை விளக்க வேண்டுமா? வீடணனின் இதயப்பாங்கை அறிந்த பெருமான்

குகனெடும் ஐவர் ஆனேம்
முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனெடும் அறுவர் ஆனேம்
எம்முழை அன்பின் வந்த
அகநமர் காதல் ஐயா
நின்னெடும் எழுவர் ஆனேம்,
புகலரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் உந்தை

இப்பாடல் ஆழ்வார்களின் பாசுரங்களின் தெய்வக்கனவு பரதன் அரசு வேண்டாது பாதுகையை வேண்டினன். அதனையே வீடணனும் வேண்டினன். அப்போது பெருமான் பரதன் பண்பை வீடணன் பால் கண்டு அவனைத் தன் சகோதரனுக ஏற்றுக் கொள்கிருன். அகனமர் காதல் ஐய என்கிருன். தசரதனை உந்தை என்கிருன். எந்தை உந்தையானது. இத்தொடர் அன்பின் ஆழத்தைக் காட்டுகிறது.

இலக்குவன் பண்பைக் குகன்பால் கண்ட இராகவன் அவனைத்தன் உடன்பிறப்பாக ஏற்றுக் கொண்டான். அதனல் சமய உலகம் இளையபெருமாள் என்று இலக்குவனைபோற்றினற் போல குகனைக்குகப் பெருமாள் என்று பேசிமகிழ்ந்தது. அது போலவே ''ஆழ்வான் பரத''னின் பண்பை வீடணன்பால் கண்ட சமய உலகம் அவனை விபீஷண ஆழ்வார் என்று சிறப்பிக்கிறது. பெரியாழ்வார்

நேரா அவன் தம்பிக்கே
நீள் அரசு ஈந்த
ஆரா அமுதனைப் பாடிப்பற
அயோத்தியர் வேந்தனைப்
பாடிப் பற

என்று மனம் உவந்து பேசினர். நீள் அரசு என்ற ஆழ்வாரின் பாசுரம் ''ஏழாய் நின்ற உலகும் என்பெயரும் ...... வாழும் நாள் அன்று காறும் .. .. இலங்கைச் செல்வம் நின்னதே என்று விரிவு பெற்று ஐயன் மொழியாக வெளிப்படுகிறது.

தன்னடியார் என்று தொடங்கும் பெரியாழ்வாரின் பாசுரத்திற்கு (பிர413) அமுத உரை வழங்கிய மணவாள மாமுனிகள் வீடண அடைக்கலத்துக்கு மெய்யுரை வழங்கினர்.

குற்றமுண்டு என்ற மஹாராஜரையும் குற்றமில்லை என்ற திருவடி இளைய பெருமாளையும் பூர்வபக்ஷமாக்கி, குற்றமுண்டு நான்கைக் கொள்ளக்கடவேன் என்ருரிறே பெருமாள். சிதகுரைக்கும் என்றது மஹாராஜர் கோடி: என்னடியார் அது செய்யார் என்றது திருவடி இளைய பெருமாள் கோடி.

பிரபந்தக் கண் கொண்டு இராமகாதையைக் காணும் பாங்கை (மணவாள மாமுனிகள் போல்) கவிச்சக்கரவர்த்தியும் அறிந்திருந்தான் போலும்.

வீடணன் தங்க விக்கிரகம். ஆழ்வார்களின் பாசுரங்கள் அந்த விக்கிரகத்தில் ஒளியைப் பாய்ச்சுகின்றன. சான்ருேர்களின் ஒளியைப் பெற்றுப் பொலிகின்ற வீடணனைக் கவிச்சக்ரவர்த்தி படம் பிடித்து நமக்கு வழங்கி உள்ளான்.